# திருக்கோயில்

"என்கடன் பணி செய்து கிடப்பதே"



மீனாட்சியம்மை திருமணம்

மாலை 5] சோபகிருது ஆடி - ஆகஸ்டு 1963 [மணி 11

சென்னை அரசாங்க அறநிலையப்
பாதுகாப்புத் துறை வெளியீடு





தருமபுர ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள், மதுரை மீனாட்சி கோயிற் கும்பாபிஷேகத் திருப்பணிக் குழுத் தலைவர் தமிழவேள் திரு. பி. டி. ராஜன் அவர்களுக்குப் பொன்னாடை போர்த்துப் பிரசாதம் வழங்கும் காட்சி.



## பொருள் அடக்கம்




ஆண்டுச் சந்தா ரூ. 10/-  தனி இதழ் விலை ரூ. ஒன்று.


## சந்தா தாரர்களுக்கு வேண்டுகோள்

'திருக்கோயில்' இதழின் சந்தாதாரர்கள் ஆகச் சேர விரும்புபவர்கள், "திரு. ஆணையர் அவர்கள், அறநிலைய ஆட்சித்துறை, சென்னை 34" என்னும் முகவரிக்கு ரூபா பத்து அனுப்பி, எப்போது வேண்டுமாயினும் சந்தாதாரர்கள் ஆகச் சேர்ந்து கொள்ளலாம்.

அல்லது, அவ்வவ் வட்டார அறநிலைய உதவி ஆணையர்களின் அலுவலகங்களிலும் மேற்படி சந்தாத் தொகையைச் செலுத்திச் சேரலாம்.

ஓர் ஆண்டின் நடுவில் எந்தமாதத்திற் சேர்ந்தாலும், அடுத்த ஆண்டில் அந்தமாதம் வரையில், 12 இதழ்கள் அனுப்பப் பெறும்.

ஓர் ஆண்டிற்குக் குறைந்த சந்தாத் தொகை ஏற்கப் பெறுவதில்லை.

சந்தாதாரர்கள் தங்களுடைய சரியான முழு முகவரியைத் தெரிவித்தல், இதழ்கள் தவறுமற் சேர்தற்கு மிகவும் இன்றியமையாதது.

— ஆசிரியர்.




மாலை 5] சோபகிருது ஆடி-ஆகஸ்டு 1963 [மணி 11

# ஸ்ரீ மீனாட்சியும், காமாட்சியும்

## முன்னுரை

அகிலாண்ட கோடியெலாம் ஈன்ற அன்னை யாய்ப் பின்னையும் கன்னி என மறைகள் பேச விளங்கும் அம்பிகைக்கு, எத்துணையோ பல பெயர்கள் உரியனவாக இருப்பினும், அவை களிற் பெரிதும் போற்றி வழங்கப்பெறும் சிறப் புடைய பெயர்கள் சிலவற்றுள், **மீனாட்சி— காமாட்சி** என்னும் பெயர்கள் இரண்டும் குறிப் பிடத் தக்கனவாகும்.

## மதுரையும், காஞ்சியும்

தமிழ் நாட்டில் எத்துணையோ பல சிறந்த நகரங்கள் இருக்கின்றன. அவற்றுள் மிகவும் பழமையும் பெருமையும் வாய்ந்த வரலாற்றுச் சிறப்புடைய நகரங்கள் ஒருசிலவே. அவற் றுள்ளும் மிகவும் சிறப்புடையனவாகக் குறிக்கத் தக்கவை. **மதுரை, காஞ்சிபுரம்** என்னும் இரண்டுமே யாகும். மதுரை பாண்டிய நாட் டின் தலைநகரம். காஞ்சிபுரம் பல்லவ மன்னர் களின் கோநகரம். **உறையூர், காவிரிப்பூம் பட்டினம்** முதலியன சோழ மன்னர்களுக்கும், **வஞ்சி,** கருவூர் முதலியன சேர அரசர்களுக்குச் சிறப்புடைய தலைநகரங்களாக, ஒரு காலத்தில் விளங்கி யிருந்தன. ஆயினும், அவைகளெல் லாம் இன்று தம் பண்டைப் பெருமையிற் குன் றிப் பொலிவிழந்து எளிய நிலையிலேயே உள் ளன. ஆனால், பாண்டிய வேந்தர்களின் தலை நகரமாகத் திகழ்ந்த மதுரையும், பல்லவ அரசர் களின் தலைநகரமாக விளங்கிய காஞ்சிபுரமும், ஏறத்தாழ 2000 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே இன்றளவும் பெரிதும் சிறப்புற்றுப் பிறங்கி வரு கின்றன. இதற்குக் காரணம் மதுரைமா நகரில் **மீனாட்சியம்மையும்,** காஞ்சிபுரத்தில் **காமாட்சியம்மையும்** எழுந்தருளி வீற்றிருந்து விளங்கிக் காத்து வருதலே யாகும். இவ்வுண் மை பற்றியே இவ்விரு பெரு நகரங்களுக்கும் **கன்னி காப்பு** எனவும் ஒரு பெயர் வழங்கி வருகின்றது.

## மீனாட்சி : சொற் பொருள் விளக்கம்:

மீனாட்சி, காமாட்சி என்னும் இரு பெயர் களும் மிகுந்த பொருட் செறிவுடையனவாக விளங்குகின்றன. மீனம்-மீன். அட்சம்-கண். அட்சி-கண்ணை யுடையவள். மீன+அட்சி- மீனாட்சி. மீன் போன்ற கண்ணையுடையவள் என்பது பொருள்.

கோழி, முட்டையின் மேல் அடை காத்துக் கிடந்து பக்குவம் நோக்கி முட்டையைப் பிரித் துக் குஞ்சுகளை வெளிப்படுத்தும். ஆமை, கட லின் கரையிலே சேமித்து வைத்த தன் முட்டை

களைத் தான் சேய்மையிற் சென்று நினைவு கூர்ந்து, அந்நினைவின் ஆற்றலாற் குஞ்சு பொரிக்கச் செய்யும். மீன் தன் சினைகளைக் கண்ணுற் பார்த்து நின்று, அக் கட்பார்வையின் திறனல், அவற்றினின்று குஞ்சுகள் தோன்றச் செய்து காப்பாற்றும். இவ்வுண்மையினை,

" இரங்கியவா ரணம்ஆமை
மீன்அண்டம் சினையை
இயல்பினெடு பரிசித்தும்
நினைந்தும் பார்த்தும்
பரிந்திவைதாம் ஆக்குமா
போற் சிவமே யாக்கும்
பரிசித்தும் சிந்தித்தும்
பார்த்தும் தானே "

என வரும் சிவஞான சித்தியார் செய்யுளாலும்,

" அன்னைதன் சிசுவை ஐயன்
ஆமைமீன் பறவை போலத்
தன்னகம் கருதி நோக்கித்
தழுவி "

என வரும் கைவல்ய நவநீதக் கவிதையானும், யாவரும் இனிதுணர்ந்து தெளியலாம்.

மீன் தன் கட்பார்வையின் ஆற்றலினல் முட்டைகளினின்று குஞ்சு பொரித்து வெளிப்படச் செய்து அவற்றைப் பாதுகாக்கும் செயல் போல, உலகத் துயிர்களை யெல்லாம் தனது அருள் கனிந்த கடைக்கண் பார்வையின் ஆற்றலால் பாதுகாத்து நலம்புரிந்தருளும் திறம் பற்றி, அம்பிகைக்கு மீனுட்சி எனச் சான்றேர்கள் பெயரிட்டு வழங்குவாராயினர்.

மீனுட்சி யம்மை தன் கடைக்கண் பார்வை நலத்தால் உலகத் துயிர்களை யெல்லாம் பாதுகாத்து அருள் செய்யும் திறனை,

" ஒளியால் உலகின் றுயிர்அனைத்தும்
மீன்போற் செவ்வி யுறநோக்கி
அளியால் வளர்க்கும் அங்கயற்கண்
அன்னே கன்னி யன்னமே "

எனவரும் பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணச் செய்யுளானும் தெளியலாம்.

## மீனின் கண்கள் இமையாமை:

இனி இதற்கு வேறு வகையாகவும் விளக்கம் கூறுவர் சான்றேர். மீனின் கண்களுக்கு இமைகள் இல்லை. இமைகள் இல்லாமையால், மீனின் கண்கள் இரவும் பகலும் மூடுதல் இன்றி விழித்துக் கொண்டிருக்கும்.

" மீன்கண் துஞ்சும் பொழுதும்
யான்கண் துஞ்சலன் யாதுகொல் நிலையே "

என்பது நற்றிணை நானூறு. எனவே, மீன் இரவும் பகலும் கண்களை மூடாது விழித்துக் கொண்டிருக்கும் தன்மை போல, ஒரு கணப் பொழுதும் ஒழிவின்றிக் கண் இமையாமல் இருந்து உயிர்களைக் கருணையுடன் பாதுகாத்து நலம் புரியும் அம்பிகை மீனுட்சி எனக் காரணப் பெயர் பெற்றுள்.

## சௌந்தரிய லகரி :

அம்பிகையின் கண்கள் அருளால் திறந்து மலர்வதனல் தோன்றும் இவ்வுலகம், அவள் தன் கண்களைச் சற்றே மூடி இமைப்பாளாயின், அவ்வளவில் அழிந்தொழிதல் கூடும். அங்ஙனம் நேராமைப் பொருட்டு, மீன் போலத் தன் கண்களை இமைக்காமல் இருந்து உலகங்களை யெல்லாம் அம்பிகை அருளாற் பாதுகாத்து வருகின்றுள். அதுபற்றி மீனுட்சி எனப் பெயர் பெற்றுள் எனினும் பொருந்தும். இக்கருத்து,

" இணைவிழி இமையா நாட்டம்
எய்தியது அலரத் தோன்றும்
பணைநெடும் புவனம் இந்தப்
பார்வைசற் றிமைக்கு மாயின்
துணையிழந் தழிவ தெண்ணித்
துணிந்தநின் கருணை என்றல்
கணையினும் கொடிய தென்னக்
கடவதோ? கடவுள் மாதே "

எனவரும் சௌந்தரிய லகரித் தமிழ்ச் செய்யுளால் விளக்கப் பெற்றிருத்தல் காணலாம்.

## மீனுட்சி : தமிழிற் பெயர்கள்:

மீனுட்சி என்பதனை அங்கயற்கண்ணி என்றும், மீனநோக்கின் மடவரல் என்றும்,



மீனுட்சியம்மை அரசாட்சி புரிதல்

கயல்மாண்ட கண்ணி என்றும் பிறவாறும் பெரியோர்கள் தமிழில் வழங்கியுள்ளனர்.

"அங்கயற் கண்ணி தன்னெடும் அமர்ந்த
ஆலவாய் ஆவதும் இதுவே"

—சம்பந்தர்.

"மீன நோக்கின்
மடவரலை மணந்துலகம் முழுதாண்ட
சுந்தரனை வணக்கம் செய்வாம்"

—பரஞ்சோதி முனிவர்.

"கயல்மாண்ட கண்ணிதன் பங்கன்
எனைக் கலந் தாண்டலுமே
அயல்மாண்டு அருவினைச் சுற்றமும்
மாண்டு அவனியின் மேல்"

—மாணிக்கவாசகர்.

**காமாட்சி: சொற்பொருட் கருத்து.**

இங்ஙனமே காமாட்சி என்னும் திருப்பெயர்க்கும் சிறந்த பல பொருள்களைப் பெரியோர்கள் கூறுவர். கா+மா+அட்சி. கா—சரசுவதி. மா—இலட்சுமி. அட்சி—கண்ணுக உடையவள். சரசுவதியையும் இலட்சுமியையும் தனக்குக் கண்களாக உடையவள் காமாட்சி எனப்படுவள். எனவே, கல்வி நலனையும் செல்வ நலனையும் ஒரு சேரத் தன் அடியார்களுக்குத் தன் கடைக்கண் பார்வையால் விளைத்துக் கொடுத்து நலம் புரியும் திறம் வல்லவள் காமாட்சி என்பது கருத்து.

"தண்ணுர் இதழி புனைவான்
விழியிணை தம்மனைகள்
பண்ணு அழிக்கும் என்றே? நின்
திருமுக பங்கயத்திற்
கண்ணு யினர், உனக்கு அவ்அலை
மாதும் கலைமகளும்!
பெண்ணு ரமுதனை யாய்! குன்றை
வாழும் பெரியம்மையே!"

—சிவப்பிரகாச சுவாமிகள்.

இனி, காமம்—விருப்பம். காம+அட்சி—காமாட்சி எனக் கொண்டு, 'அடியார்கள்

விரும்பி நினைத்தவற்றை யெல்லாம் தரும் அருள் நோக்கம் உடையவள்' என்றும்; க+அ+ம+அட்சி எனப் பிரித்துக் கொண்டு, க-பிரமனை யும், அ-திருமாலையும், ம-உருத்திரனையும், அட்சி—கண்ணுற் படைப்பவள் என்றும், பிற வாறும் பொருள் கூறுவதுண்டு.

"திருமகள் வலக்கண், வாக்கின்
சேயிழை இடக்கண், ஞானப்
பெருமகள் நுதற்கண் ஆகப்
பெற்று,வான் செல்வம் கல்வி
அருமைவீ டளிப்பாள் யாவள்?
அவள்உயிர்த் துணைவன் காண
ஒருமுலை மறைந்து நாணி
ஒசிந்தபூங் கொம்பில் நின்ருள்."

—பரஞ்சோதி முனிவர்.

காமாட்சி என்பது 'காமக்கண்ணி' எனத் தமிழில் வழங்கும். சங்க காலத்திற் பெண்பாற் புலவர் ஒருவர் காமக்கண்ணி என்னும் பெய ருடையவராக விளங்கி யிருந்தார். அவர் 'வேலன் வெறியாடல்' குறித்து அழகுறப் பாடிய சிறப்புப் பற்றி வெறிபாடிய காமக்கண்ணியார் என வழங்கப் பெற்ருர். காமாட்சி என்னும் திருப் பெயரைத் தமிழிற் காமக்கொடி எனவும், காமக்கோட்டியம்மை எனவும் பிறவாறும் சான் ருேர்கள் வழங்கியுள்ளனர்.

## பெண்ணினத்திற்கு எடுத்துக்காட்டு:

மீனுட்சியும் காமாட்சியும் ஆகிய அம்பிகை யின் இயல்புகள், பெண்ணினத்திற்கு அமைய வேண்டிய அரும்பெறற் பண்புகள் இவை யிவை என்பதனை இனிது உணர்த்துவன ஆகும். தமிழ்நாட்டுப் பெண்மகளிர் ஒவ்வொரு வரும் எவ்வெவ்வகைப் பண்புகளைத் பெற்றிருத் தல் வேண்டும் என்பதற்கு ஸ்ரீ மீனுட்சியம்மை யும், ஸ்ரீ காமாட்சியம்மையும் எடுத்துக்காட்டுக் களாக விளங்குகின்றனர் எனலாம்.

## கணவனை உயர்த்தும் மனைவி:

ஒவ்வொரு பெண்ணும் தன்னை மணந்து கொண்ட கணவனுக்குப் பலவகை மாட்சிமை களும் அமையும்படி ஒழுகுதல் வேண்டும் செல்வம் மிக்க கணவனை மணந்துகொண்டு அவ்வாற்ருல் தான் புதிய சிறப்பைப் பெற்று வாழ்வதைவிட, ஏழைக் கணவனே யாயினும் தன்னுல் அவன் சிறப்புற்று வாழும்படி செய்ய வல்ல பெண்மகளே சிறப்புடையவள் ஆவாள். கணவனுல் சிறப்பைப் பெறும் மனைவியைவிட, கணவனுக்குத் தன்னுற் சிறப்பை யுண்டாக்கும் மனைவியே, சிறந்த பெண்ணின் நல்லாள் என மதிக்கப் பெறுவாள். மனைவியின் குணமாட்சி மையால் வறுமைமிக்க கணவனும் பெருவளம் பெறுவதுண்டு. 'இவள் வந்த பின்னரே இவ் வீட்டில் இவன் இவ்வளவு செல்வமும் வாழ்வும் பெற்ருன்' என ஊரவர் கூறுமாறு ஒரு பெண் வாழ்தல் வேண்டும்.

"உடுத்தும் தொடுத்தும் பூண்டும் செரீஇயும்
தழையணிப் பொலிந்த ஆயமொடு துவன்றி
விழவொடு வருதி நீயே! இஃதோ
ஓர்ஆன் வல்சிச் சீரில் வாழ்க்கை
பெருநலக் குறுமகள் வந்தென
இனிவிழவு ஆயிற்று என்னும்இவ் வூரே"

எனவரும் குறுந்தொகைப் பாடல், இக் கருத் தினை வலியுறுத்தும்.

"இல்லதென் இல்லவள் மாண்பானல்?
உள்ளதென்
இல்லவள் மாணுக் கடை?"

"புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை,
இகழ்வார்முன்
ஏறுபோற் பீடு நடை"

எனவரும் இனிய திருக்குறட் பாக்களும் இவ்வுண்மையை இனிது விளக்கும்.

## மீனுட்சியால் வந்த அரசாட்சி:

மீனுட்சியம்மையாகிய தடாதகைப் பிராட் டியை மணந்து கொண்டதனுல், சுந்தரபாண்டி யன் ஆகிய சிவபெருமான், பல சிறப்புக்கள் பெற்ருன். சடை கட்டியிருந்த அவன், மணி மகுடம்தரித்தான்; கொன்றைமாலையைப் போட் டிருந்த அவன், பாண்டியர் குலத்து வேந்தர் களுக்குரிய வேப்பம் பூ மாலையைச் சூடினுன்; பாம்புகளை அணிகலன்களாகக் கொண்டிருந்த அவன், மாணிக்கச் சுடர்ப்பூண் ஏந்தினுன்; விடைக் கொடியை நீக்கிக் கயற்கொடியை எடுத்தான்; ஆண்டியாக இருந்த அவன்,

பாண்டியனின் மருமகனாகி உலகம் முழுவதையும் அரசாட்சி செய்தான். இவை எல்லாம் மீனாட்சியால் வந்த வாழ்வுதானே, சோமசுந்தரப் பெருமானுக்கு!

"சடைமறைத்துக் கதிர்மகுடம் தரித்து நறும்
கொன்றையந்தார் தணந்து வேப்பம்
தொடைமுடித்து விடநாகக் கலன்அகற்றி
மாணிக்கச் சுடர்ப்பூண் ஏந்தி
விடைநிறுத்திக் கயல்எடுத்து வழுதிமரு
மகன்ஆகி மீன நோக்கின்
மடவரலை மணந்துலகம் முழுதாண்ட
சுந்தரனை வணக்கம் செய்வாம்"

—பரஞ்சோதி முனிவர்.

**பானை பிடித்த பாக்கியம்:**

இங்ஙனம் சொக்கநாதர் ஆகிய சிவபெருமான் பெற்ற சிறப்பெல்லாம், அவர் சொக்க



மீனாட்சியம்மை திருமணம்

நாயகி ஆகிய மீனாட்சியை மணந்துகொண்ட மாட்சிமையால் விளைந்த பயன்களேயாகும் எனலாம். ஏனெனில், மீனாட்சியை மணப்பதற்கு முன்னர்ச் சொக்கநாதர் ஆனையை உரித்து அதன் தோலைத்தான் போர்த்துக் கொண்டிருந்தார்; அடியும் பட்டார்; மானம் அழிந்து அங்கங்கே இரந்து பிச்சை எடுத்துத் திரிந்துகொண்டு இருந்தார். சொக்கநாயகியாகிய மீனாட்சியை மணந்துகொண்ட பின்னரோ, பாண்டியனின் மருமகனாகி எல்லாப் பெருமைகளையும் எய்தி உலகங்களை யெல்லாம் ஆளத் தலைப்பட்டார். இத்தகைய பெருவாழ்வு மீனாட்சி யம்மையினால்தான், சோமசுந்தரப் பெருமானுக்குக் கிடைப்பதாயிற்று. ஏர் பிடித்தவன் யாது செய்தல்கூடும்? யாவும் பானை பிடித்தவள் பாக்கியமே யன்றோ!

"ஆனை யுரித்தும் அதள்தனைப்
போர்த்திட்டு, அடியும் பட்டு
மானம் அழிந்தங்கு இரந்தே
திரிந்த மதுரைச் சொக்கர்
ஞானம் மிகப்பெற்று வாழ்வதெல்லாம்
சொக்க நாயகியாள்
பானை பிடித்த முகூர்த்தத்தினால்
வந்த பாக்கியமே"

—தனிப்பாடல்.

மீனுட்சி யம்மையினுல்தான் சொக்கநாதப் பெருமான் அரச வாழ்வு பெற்றுர்! சுந்தர பாண்டியன் என்னும் பெயர் தாங்கிப் பாண்டிய நாட்டை அரசாண்டார்.

"விண்ணரசும் பிறஅரசும்
சிலர்எய்த விடுத்தொரு நீ
பெண்அரசு தரக்கொண்ட
பேரரசு செலுத்தினேயே"
"ஊன்கொண்ட முடைத்தலையில்
பலிகொண்டார்க்கு உலகேழும்
தான்கொண்ட அரசாட்சி
தந்தநினைப் பாடுவனே"

—குமரகுருபர சுவாமிகள்.

## மனைமாட்சி :குடும்பப் பண்பு

இனி, ஒரு பெண்ணின் நல்லாள் குடும்ப வாழ்க்கைக்கு ஏற்ற குணங்கள் (மனைத்தக்க மாண்புகள்) உடையவள் ஆகவும், தன் கணவனின் வருவாய்க்கு ஏற்றபடி அளவறிந்து குடும்பம் நடத்தும் இயல்பு (மனைமாட்சி) வாய்ந்தவள் ஆகவும் இருப்பது இன்றியமையாதது.

"மனைத்தக்க மாண்புடையள் ஆகித்
தற்கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை"
"மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின்
வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல்"

—திருக்குறள்.

ஒரு குடம் நீராற் சோறுசமைத்து உண்ணுமாறு வறுமை நேர்ந்த காலத்தும் இனிமை கலந்த நன்மொழியும், கணவன்மேற் காதலும், குடும்ப வாழ்க்கைக்குரிய நல்லியல்புகளும் உடையவளாய், கடல்நீரை எல்லாம் வற்ற உண்ணும் அளவிற்குப் பெருந்திரளான சுற்றத்தார் ஒருங்கேவரினும், செல்வம் நிறைந்திருந்தாற் போல மகிழ்ச்சியுடன் வரவேற்று உபசரிப்பவளாய், மிகவும் திறம்படக் குடும்பம் நடத்து தலைக் குறிக்கோளாகக் கொண்டு, ஒரு சிறந்த பெண்மகள் ஒழுகுதல் வேண்டும்.

"குடநீர்அட் டுண்ணும் இடுக்கட் பொழுதும்
கடல்நீர் அறவுண்ணும் கேளிர் வரினும்
கடன்நீர்மை கையாறுக் கொள்ளும் மடமொழி
மாதர் மனைமாட்சி யாள்"

—நாலடியார்.

## காமாட்சியின் மனைமாட்சி :

ஒரு குடும்பப் பெண்ணுக்குரிய இவ்வியல்பிற் சிறந்து திகழ்ந்து எடுத்துக்காட்டாக விளங்குபவள் காமாட்சியம்மை. தன் கணவன் ஆகிய சிவபெருமான் அளித்த இரண்டு நாழியளவு நெல்லைக்கொண்டே, இவ்வுலகில் 32 அறங்களையும் காமாட்சியம்மை குறைவறச் செய்து முடித்தாள்.

தொல்லை மறைதேர் துணைவன்பால் ஆண்டுவரை
எல்லை இருநாழி நெற்கொண்டோர்-மெல்லியலாள்
ஓங்குலகில் வாழும் உயிர்அனைத்தும் ஊட்டுமால்
ஏங்கொலிநீர்க் காஞ்சி யிடை

இச் செய்யுள் தண்டியலங்காரம் என்னும் நூலில், பொருட்குறை விசேடம் என்னும் அணியியலுக்கு மேற்கோள் ஆகும். இங்ஙனம் காமாட்சியம்மை குடும்ப வாழ்க்கைக்குரிய மனைமாட்சித் திறனில் சிறந்து விளங்கி, அறம் பல வளர்த்த அருமைப்பாட்டினைப் புகழ்ந்தோதும் சான்றோர்களின் பொருண்மொழிகள் அளவிடற்கரியன.

நனைமாட்சி மென்கொன்றைத் தாரோன்
தரும்இரு நாழி நெல்லால்
வினைமாட்சி கொண்டு உயிர் எல்லாம்
அளித்தருள் மேன்மையினல்
மனைமாட்சி எய்தும் உனக்கே
பெருங்கற்பு மாட்சியன்றிப்
பினைமாட்சி யார்க்குண்டு? உலகீன்ற
குன்றைப் பெரியம்மையே

—சிவப்பிரகாச சுவாமிகள்.

இல்லாளே முப்பத் திரண்டறமும் செய்திருப்பச்
செல்லார் பொழிற்காசிச் செல்வனுர்—மெல்லப்
பரக்கின்ற புண்ணீர்ப் படுதலைகொண் டையம்
இரக்கின்ற வாறென்சொல் கேன்?

—குமரகுருபர சுவாமிகள்.

இங்ஙனம், 'அனந்தகோடிப் பிள்ளைகள் பெற்றுடைய பெருமனைக் கிழத்தியாய், இரு நாழி நெற்கொண்டே எண்நான்கு அறமும் செய்து' **குடும்பம் பேணிய காமாட்சியம்மையின்** பெருஞ்சிறப்பு, நம் சமய ஆசிரியர்களால் பெரிதும் புகழ்ந்து போற்றப் பட்டுள்ளது.

**நச்சித் தொழுவீர் கள்நமக் கிதுசொல்லீர்**
**கச்சிப் பொலிகா மக்கொடி யுடன்கூடி**
**இச்சித் திரும்பூ ளையிடம் கொண்டஈசன்**
**உச்சித் தலையிற் பலிகொண் டுழல்வானே**

—சம்பந்தர்.

**காரிரும்பொழிற் கச்சி மூதூர்க்**
**காமக்கோட்டம் உண்டாக நீர்போய்**
**ஊரிடும்பிச்சை கொள்வ தென்னே**
**ஓணகாந்தன் தளியுளீரே**

—சுந்தரர்.

## கணவன் வழிபாடு

காமாட்சியம்மையின் வேறு சில பண்புகளும் ஈண்டுக் கருதத் தக்கன. கற்புடை மனைவிக்குக் கணவனை என்றும் நீங்காதிருந்து போற்றி வழிபடுதல், ஒரு தலை சிறந்த கடமையாகும். **கொழுநற் றொழுதெழுதல், குடும்பம் பேணும் குலமகளிர்க்கு உரிய அழகு.**

**"பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் [பெருஞ்சிறப்புப்**
**புத்தேளிர் வாழும் உலகு"**

என்னும் திருக்குறளால் **திருவள்ளுவர்,** கணவனை வழிபடுதல் கற்புடை மகளிர்க்கு இன்றியமையாப் பண்பு எனக் குறித்தருளினார். காமாட்சியம்மை திருவேகம்பநாதரை என்றும் முடிவிலாப் பூசை இயற்றிவரும் திறனைப் **பெரிய புராணம், காஞ்சிப்புராணம்** முதலிய அருள்நூல்கள் விளக்கி யுரைக்கின்றன. மேலும், இறைவன் குழையும்படி அம்மை தழுவிய செயல், கணவன் முரடனாக இருப்பினும் மனைவி தன்னுடைய மென்மைப் பண்பால் அவனை நல்வழிப்படுத்தும் கடப்பாடு உடையவளாவாள் என்பதைப் புலப்படுத்துகின்றது எனலாம்.

## இருவரின் சிறப்பு இயல்புகள்

‡ இங்ஙனம் கடவுட் பண்பு நலங்களையெல்லாம், நாம் நம் கற்றறிவும் சிற்றறிவும் கொண்டு கருதி அளந்தறிய முற்படுதல், நமக்கு எளிதில் இயல்வதொன்று அன்றாயினும், கடவுட் கோட்பாடுகளின் தத்துவ நுட்பக் கருத்துக்களைத் தக்காங்கு ஓரளவேனும் உணர்ந்து கொள்ள முயலுதல் நலம் பயப்பதே யாகும்.

மீனாட்சியம்மை **பெண்ணரசி** (பெண்களுக்கெல்லாம் அரசியாகச் சிறந்து திகழ்பவள், பெண்ணாக விளங்கியும் திறம்பட அரசாட்சி செலுத்தியவள்).

**நாற்குணமும் நாற்படையா ஐம்புலனும் நல் [லமைச்சா**
**ஆர்க்கும் சிலம்பே அணிமுரசா—வேற்படையும்**
**வாளுமே கண்ணா வதன மதிக்குடைக்கீழ்**
**ஆளுமே பெண்மை அரசு**

—நளவெண்பா.

காமாட்சியம்மை **பெண்ணின் நல்லாள்.** இவ்வாறே பெரியபுராணம் காமாட்சியம்மையைக் குறிப்பிடுகின்றது. ஆசிரியர் **சேக்கிழார்** சுவாமிகள் காமாட்சியம்மையைப் "பெண்ணின் நல்லவள் ஆயின பெருந்தவக் கொழுந்து" எனச் சிறந்தெடுத்துக் கூறிப் போற்றுகின்றார்.

மீனாட்சியம்மை கணவனை **உயர்த்தும் மனைவியாக** விளங்குகின்றாள்; காமாட்சியம்மை கணவனை **வழிபடும்** மனைவியாகத் திகழ்கின்றாள்.

"பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும் பாரினிற் பெண்கள் நடத்த வந்தோம்" எனப் **பாரதியார்** பாடுவதுபோல, மீனாட்சியம்மை அரசியல் **வினைமாட்சியில்** வல்ல புதுமைப் பெண்போலப் பொலிகின்றாள். காமாட்சியம்மையோ சிக்கனமும் **செம்மைத்திறமும்** உடையவளாய், இல்லறம் நடத்தும் **மனைமாட்சியில்** வல்லவளாக வயங்குகின்றாள். சுருங்கக் கூறலுறின், **துரைத்தனத்திற்கு**

‡ "Let us, then, if you please, in the first place, announce to the gods that we are not enquiring about them; we do not presume that we are able to do so; but we are only enquiring about the meaning of men in imagining their forms and worshipping them".

—Socrates, in Plato's Cratylus.

மீனுட்சியும், குடித்தனத்திற்குக் காமாட்சியும் இணையற்ற எடுத்துக்காட்டாக விளங்குகின்றனர் எனலாம்.

பெண்மையின் பெருமிதம் மீனுட்சியாகவும், அருளியல்பு காமாட்சியாகவும் பிறங்குகின்றன. மீனுட்சி பசுமைநிறம் (செல்வச் செழிப்பு) உடையவள்; காமாட்சி பொன்மைநிறம் (பண்பாட்டின் தூய்மைச் சிறப்பு) வாய்ந்தவள். உலகியல் வாழ்வில் மக்களுக்குச் செல்வச் செழிப்பும், பண்பாட்டுச் சிறப்பும் ஆகிய இரண்டும் வேண்டும் என்னும் உண்மையை, அருளுருவாகிய அம்பிகையின் இவ்விரு கூறுகளும் நமக்குச் செவ்விதிற் புலப்படுத்துகின்றன.

## முடிவுரை :

* "உலகப் படைப்பில் மிகவும் அழகும் கவர்ச்சியும் உடையவர்கள். கடவுளின் கலைத் திறனில் இறுதியாயும் இணையற்றும் சிறந்து விளங்குபவர்கள். காணவும் கருதவும் படக் கூடிய எல்லா நலங்களும் சிறப்புறப் பொருந்திப் புனித—தெய்விக—நல்ல—விழைதக்க இனிய நிலையில் திகழ்பவர்கள்" என ஜான் மில்ட்டன் என்னும் ஆங்கிலப் பெருங்கவிஞர் புகழ்ந்து கூறும் பெண்குலத்திற்கே, இணையற்ற இனிய எடுத்துக்காட்டாக எல்லாவகைகளிலும் சிறந்து விளங்கும் மதுரை மீனுட்சியம்மையையும், காஞ்சி காமாட்சியம்மையையும் நாம் நம் மனமொழி மெய்களினுல் நன்கினிது வழிபட்டு நலம்பெற்று உய்ய முயலுவோமாக (காசி விசாலாட்சியம்மை பற்றிப் பிறிதொரு சமயம் கருதி ஆராய்ந்தறிந்து மகிழ்வோம்.)

* "O woman! Fairest of Creation! Last and best
Of all god's works! Creature in whom excelled
Whatever can to sight or thought be formed
Holy, Divine, Good, Amiable and Sweet."
—John Milton.



மதுரைக் கும்பாபிஷேக விழாவில், காஞ்சிகாமகோடி பீடம் ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் கலந்துகொண்டு சிறப்பிக்கும் காட்சி

# பராக்கிரம பாண்டியனின் பண்பாடு

**பராக்கிரம பாண்டியனின் பண்பாடு:**

பிற்காலப் பாண்டிய மன்னர்களுள்ளே சடையவர்மன் பராக்கிரம பாண்டியன் என்று ஒருவன் இருந்தான். அவனது சிவபத்திச் சிறப்பும், செந்தமிழ்ப் புலமையும், சிறந்த பண்பாடுகளும் பெரிதும் போற்றுதற் குரியன. ஒரு சிறந்த அரசனுக்கு உரிய எல்லாத் தகுதிகளும் அவன்பால் அமைந்திருந்தன.

இப் பராக்கிரம பாண்டிய மன்னனுக்கு அரிகேசரி தேவன் எனவும் வேறொரு பெயர் உண்டு. இவ்வரசன் கி. பி. 1422 முதல் 1463 வரை ஏறத்தாழ நாற்பது ஆண்டுகளுக்குமேல் சிறப்புற அரசாட்சி செலுத்தினன். 'பொன்னின் பெருமாள்' 'மானகவசன்' முதலிய சிறப்புப் பெயர்களை அவன் பெற்றிருந்தான். திருநெல்வேலியைச் சூழ்ந்த நாட்டுப் பகுதிகளைக் கி.பி. 14-ஆம் நூற்றுண்டு முதல் 17-ஆம் நூற்றுண்டுவரை ஆண்டுவந்த பாண்டிய மன்னர்களுள், பராக்கிரம பாண்டியன் என்னும் இம் மன்னன் மிகவும் சிறப்பும் புகழும் பெற்றவன் ஆவான்.

இவ்வரசன் தன் பெயருக்கு ஏற்பப் பராக்கிரமம் மிகுந்த பண்புடையவனுகவே விளங்கினன். இவன் திருக்குற்றலம், முதலைக்குளம், சங்கரநயினுர் கோயில் முதலிய பல இடங்களில் தன் பகைவர்களைத் தோற்கடித்து வெற்றி கொண்டான். 'தளவாய் அக்கிரகாரம்' சாசனப் பகுதிகளால், இவன் சேரஅரசன் ஒருவனை வெற்றிகொண்ட செய்தி அறியப்படுகின்றது. விந்தனூர் முதலிய பல இடங்களில் இவன் அந்தணர்க்குச் சதுர்வேதி மங்கலங்கள் அமைத்துதவினன். திருக்குற்றலம், திருப்புடை மருதூர் முதலிய தலங்களில் இவன் சிறந்த திருப்பணிகள் பல செய்தான். திருநெல்வேலியில் அர்த்தசாம வழிபாட்டுக்காக நிபந்தங்கள் ஏற்படுத்தினன்.

திருக்குற்றலத்திற்கு அணித்தாக உள்ளதும், சிறந்த சிற்பங்கள் பலவற்றை யுடையதும் ஆகிய தென்காசி விசுவநாதர் கோயிலைக் கட்டியவன், இப் பராக்கிரம பாண்டியனே யாவன். சகாத்தம் 1368-ஆம் ஆண்டின் முடிவில், வைகாசிமாதம் தசமி திதியில், பூருவபக்கம் வெள்ளிக்கிழமை யன்று, மீன இராசி உத்திர நட்சத்திரத்தின்போது, இவ்வரசன் தென்காசி விசுவநாதர் கோயில் அமைப்பதற்காக கர்ழ்சணை (Preparatory ceremony) செய்தான் எனக் கல்வெட்டொன்று கூறுகின்றது.

"அன்பினுடன் சகாத்தம் ஆயிரத்து முந்நூற்று
அறுபத்தெட் டதன்மேல் வைகாசித் திங்கள்
மன்திய்தி ஈரைந்தில் பூருவ பக்கம்
மருவுதெச மியில்வெள்ளி வாரம் தன்னில்
மின்திகழ்உத் திரநாள் மீனத்தில் வாகை
வேல்அரிகே சரிபராக் கிரம மகீபன்
தென்திசையிற் காசிநகர்க் கோயில் காணச்
சென்றுநின்று கர்ழ்சணைதான் செய்வித்
தானே"

இவ்வரசன் சகஆண்டு 1369 முடிவில் மிதுன ராசியில், பதினெட்டாம் தேதி சனிக்கிழமையன்று, விசுவநாதர் திருவுருவமாகிய இலிங்கத்தைத் தென்காசிக் கோயிலின் மூலத்தானத்தில் அமைத்து வழிபட்டான் என்பதும் கல்வெட்டினுல் அறியப்படுகின்றது.

கலியுகம் 4558-ஆம் ஆண்டின் முடிவில் கார்த்திகை மாதம் 5-ம் தேதி, வியாழக்கிழமை மிருகசீரிஷ நட்சத்திரத்தில் தென்காசிக் கோயிலும் கோபுரமும் அமைப்பதற்குக் கால்கோள் விழாச் செய்து முதன் முதலாகத் தொடங்கினன்,

"பன்னுகலி யுகம்நாலா யிரத்தைந்நூற்
றைம்பத்தெட்டின் மேல்எவரும் பணிந்து
போற்றச்

செந்நெல்வயல் தென்காசி நகரில்நற்
கார்த்திகைத் திங்கள்தியதி ஐந்திற்செம்
பொன் வாரம்

மன்னியமார் கழிநாளில் மதுரை வேந்தன்
வடிவெழுதொ ணுத பராக்கிரம மகீபன்

சொன்னவரைபோல் திருக்கோபுரமும் காணத்
துடியிடையாய் உபானமுதல் தொடக்கி
னனே"

சக ஆண்டு 1379 முடிவுற்ற பின்னர் கார்த்திகை மாதத்தில் 5-ஆம் தேதியில் வியாழக் கிழமையன்று சிம்மராசியில் மிருகசீரிஷ நட்சத்திரத்தில், கோபுரத் திருப்பணியை உபானம் (Basement) முதலாகக் கட்டத் தலைப்பட்டான்.

தென்காசி விசுவநாதர் கோயிலைக் கட்டி முடிக்க 17 ஆண்டுகள் ஆயின. பராக்கிரம பாண்டியனால் தொடங்கப் பெற்ற ஒன்பது நிலைக்கோபுரம் அவன் காலத்தில் முடிவு பெற வில்லை. அக்கோபுரத் திருப்பணியைத் தொடங்கி ஆறு ஆண்டுகள் கழித்துப் பராக்கிரம பாண்டியன் இறைவன் திருவடி நிழலை எய்தினன். எஞ்சி நின்ற திருப்பணிகளை, அவனது உடன் பிறந்தோன் ஆகிய சடையவர்மன் குலசேகர பாண்டியன் (கி. பி. 1429—1473) செய்து முடித்தான். தென் காசிக் கோயிற் கோபுரத் திருப்பணியைத் தொடங்கிய ஆறு ஆண்டுகளிற் பராக்கிரம பாண்டியன் இறையடி நீழல் எய்தி மறைவுற்ற செய்தி, பின் வரும் கல்வெட்டுப் பாடலால் தெரிகின்றது.

காண்டகு சீர்புனை தென்காசிக்
கோபுரக் கற்பணி, ஆ
ருண்டில் முடித்துக் கயிலைசென்ருன்
அகிலேசர் பதம்
பூண்டுறை சிந்தை அரிகேசரி
விந்தைப் போர்கடந்த
பாண்டியன் பொன்னின் பெருமாள்
பராக்ரம பாண்டியனே.

இங்ஙனம் பல ஆண்டுகள் பெரும்பாடு பட்டு மிகவும் முயன்று தான் அரிதிற் கட்டுவித்த அப் பெருங் கோயிலின்பால் பராக்கிரம பாண்டியனுக்கு எத்துணை ஈடுபாடு இருந்திருக்கும் என்பது சொல்லவும் வேண்டுமோ? அக் கோயிலின்பால் அவ்வரசர் பிரான் கொண்டிருந்த அன்பும் ஆர்வமும் பக்தியும் ஈடுபாடும் அளவிட்டுரைக்கும் தரத்தன அல்ல.

தென் காசி விசுவநாதர் கோயில் இந்நில வுலகில் என்றென்றும் நின்று நிலைபெறுதல் வேண்டும் எனவும், தன்னைப் போலவே தன் மரபில் தனக்குப் பின்வரும் அரசர்கள் அனைவரும் அதனைக் கண்ணை இமை காப்பது போற் போற்றிப் பாதுகாத்து வளர்த்து வருதல் வேண்டும் எனவும், அம் மன்னர் மன்னன் பெரிதும் ஆராமை கொண்டிருந்தான்.

அத்திருக்கோயிலும், அதனைச் சார்ந்து சந்திர சூரியர் உள்ள வரையிலும் நடைபெற்று வருதல் வேண்டும் எனத் தான் விரும்பி ஏற்படுத்திய பல்வேறு அறக் கட்டளைகளும், நித்திய நைமித்திக பூசைச் சிறப்புக்களும் பிறவும், எத்தகைய குறைபாடும் இடையூறும் இன்றி முறை முறையே வளர்பிறை போல வழிவழிப் பெருகி, வளர்ந்தோங்கிச் செழித்தல் வேண்டும் என்னும் எல்லையில்லாப் பேரார்வம், அவ்வேந்தனுக்கு அமைந்திருந்தது.

அம் மாமன்னவன், தான் உயிர் துறக்கப் போகும் இறுதி நேரத்திலும், தென் காசிக் கோயிலின் வளர்ச்சியிலும் சிறப்பிலுமே கருத்தூன்றிக் கவலை கொண்டிருந்தான் எனத் தெரிகின்றது. 'ஆவி ஆக்கை யகத்தோ புறத்ததோ' என ஐயுறத் தக்கவாறு அலமரும் நிலையிலும், அவ் வேந்தர் பெருமான், 'அரசியல் ஆயத்தார் அழிவுறும் காதலார்' ஆகிய அனைவருக்கும் தனது **இறுதி வேண்டுகோட் செய்தியாகப்** பாடியுள்ள பாடல்கள், எத்தகைய கருங்கல் மனத்தினரையும் கூடக் கரைந்துருகச் செய்ய வல்லன வாகும். அப்பாடல்களின் பொருள் பின் வருமாறு:-

தென் காசி விசுவநாதர் கோயில் தெய்வச் செயலாகச் சமைந்தது. என் செயல் அன்று. இக் கோயிலை இவ்வளவில் நிறுத்தி விடாமல், யார் இதனை இன்னும் மேலே மிகுதியாக விரிவடையச் செய்து காப்பாற்றுவார்களோ, அவர்களுடைய திருவடிகளிலே விழுந்து வணங்கி,

அவர்களுக்குக் குற்றேவல் செய்து, பராக்கிரம பாண்டியனாகிய யான் பணிந்து ஒழுகுவேன்.

மனத்தினால் நினைக்கவும்கூட இயலாத இப் பெரிய கோயிலைக்கட்டும்படி செய்து, என்னையும் தன் அருளாற் பணி கொண்டு உய்வித்த விசுவ நாதரின் தென்காசிக் கோயிலை நினைவு கூர்ந்து, ஆதரவு செய்து, அதனைக் காப்பாற்றும் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும் அரசர்களின் பாதங்களைப் பணிந்து வணங்கி, அவற்றை யான், என் தலை மீதும் தரித்துக் கொள்ளுகின்றேன்.

இந்தத் தென் காசிக்கோயிலில், ஏதேனும் வரக் கூடாத ஒரு குற்றமோ இடையூறோ வந்தால், அப்போது அங்கு வந்து அதனை நீக்கிப் பாதுகாக்கின்றவர்கள் யாராக இருந்தாலும், அத்தகைய சிறந்த புண்ணிய சீலர்களைப் பராக்கிரம பாண்டியனாகிய யான், இவ்வுலகத்தார் எல்லாரும் அறியும்படி பணிந்து நன்றியுடன் போற்றிப் பாராட்டுகின்றேன்.

தென் காசிக் கோயிலை, யார் இவ்வுலகில் தாமும் தம் சுற்றத்தாருமாகப் போற்றி அன்புடன் பாதுகாக்கின்றார்களோ, அவர்கள் மான கவசன் - கொற்கை வேந்தன் முதலிய பல பெயர்களை யுடைய பராக்கிரம பாண்டியனாகிய என்னால் போற்றப் பெறும் நிலையில் எந்நாளும் விளங்குவார்கள்.

அரிகேசரிமன் — பராக்கிரம பாண்டியன் ஆகிய யான், சிவ பெருமானின் அருளால் தென் காசிக் கோயிலைக் கட்டி உலகம் போற்றும்படி வைத்தேன். இக் கோயிலின்பால் அன்பு பூண்டு, இதனைத் திரிசேர்ந்த விளக்குப் போலக் காப்பாற்றுபவர்கள் யாரோ, அவர்களுடைய பொற்பாதங்களை என் சென்னியின் மேற் சூடிக் கொள்ளுகின்றேன்.

ஆகமம் முதலிய சாத்திரங்களை ஆராய்ந்து பார்த்து, நான் ஏற்படுத்திய பூசைகள் விழாக்கள் முதலியவற்றை நன்கு இனிது சிறப்பாக நடத்தி, விசுவநாதன் பொற்கோயிலை அன்பால் வழிபட்டுப் பாதுகாத்து வரும்படி, மிகுந்த பரிவுடன் நம் கோத்திரத்தினைச் சேர்ந்த அனைவருக்கும் அடைக்கலம் கூறிப் பிரிந்து செல்லுகின்றேன்.

சேலே றியவயல் தென்காசி
  ஆலயம், தெய்வச் செய
லாலே சமைந்தது. இங்குஎன்
  செயல்அல்ல. அதனை இன்னும்
மேலே விரிவு செய்தே புரப்பார்
  அடி வீழ்ந்து, அவர்தம்
பால், ஏவல் செய்து பணிவேன்
  பராக்கிரம பாண்டியனே. 1

மனத்தால் வகுக்கவும் எட்டாத
  கோயில் வகுக்க முன்நின்று
எனைத்தான் பணிகொண்ட நாதன், தென்
  காசியை என்றும் மண்மேல்
நினைத்து ஆதரம்செய்து தம்காவல்
  பூண்ட நிருபர்பதம்
தனைத்தாழ்ந்து இறைஞ்சித் தலைமீது
  யானும் தரித்தனனே. 2

ஆரா யினும்இந்தத் தென்காசி
  மேவும்பொன் ஆலயத்து
வாராத தோர்குற்றம் வந்தால்,
  அப்போது அங்குவந்து அதனை
நேரா கவேஒழித்துப் புரப்பார்களை
  நீதியுடன்
பாரார் அறியப் பணிந்தேன்
  பராக்ரம பாண்டியனே. 3

பூந்தண் பொழில்புடை சூழும்தென்
  காசியைப் பூதலத்தில்
தாம்தம் கிளையுடனே புரப்பார்கள்,
  செந் தாமரையாள்
காந்தன் பராக்கிரமன் கைதவன்
  மான கவசன் கொற்கை
வேந்தன் பணிபவர் ஆகி,
  எந்நாளும் விளங்குவரே. 4

அரிகே சரிமன் பராக்ரம
  மாறன் அரன்அருளால்
வரிசேர் பொழில்அணி தென்காசிக்
  கோயில் வகுத்து வலம்

புரிசேர் கடற்புவி போற்றவைத்தேன்
அன்புபூண்டு இதனைத்
திரிசேர் விளக்கெனக் காப்பார்
பொறபாதம்என் சென்னியதே. 5

சாத்திரம் பார்த்திங்கு யான்கண்ட
பூசைகள் தாம்நடத்தி
ஏத்தி அன்பால் விசுவநாதன், பொற்
கோயில் என்றும் புரக்கப்
பார்த்திபன் கொற்கைப் பராக்ரம
மாறன், பரிவுடன்நம்
கோத்திரம் தன்னில்உள் ளார்க்கும்
அடைக்கலம் கூறினனே. 6

இரும்பு தரும் மனத்தவரையும் ஈர்த்து ஈர்த்து என்பை யுருக்கிக் கரும்புதரு பெருஞ் சுவையினைக் கழிமிக நல்கிக் களிப்பிக்கும் அழகியஇனிய இக்கவிதைகள், 'தென்கலை வடகலை தெளிவுறத் தெரிந்த' பராக்கிரம பாண்டியனின் பண்பாட்டு நலங்களைச் சாலவும் விளக்குகின்றன.

வெறும் புவியரசனுக மட்டுமன்றிச் சிறந்த கவியரசனுகவும் திகழ்ந்திருந்த பராக்கிரம பாண்டியன், சகாத்தம் 1384 இல் மார்கழி மாதத்தில் சித்திரை நட்சத்திரத்திற் பௌர்ணிமை திதியில் இறையடி நீழலை எய்தினன்.

கோதற்ற பத்தி அறுபத்து
மூவர்தம் கூட்டத்திலோ,
தீதற்ற வெள்ளிச் சிலம்பகத்தோ,
செம்பொன் அம்பலத்தோ,
வேதத் திலோ, சிவ லோகத்திலோ,
விசுவநாதன் இரு
பாதத்தி லோசென்று புக்கான்
பராக்ரம பாண்டியனே.

பராக்கிரம பாண்டிய மன்னனுல் கி. பி. 1456 ஆம் ஆண்டில் தொடங்கி 17 ஆண்டுகள் முயன்று கட்டி முடிக்கப் பெற்ற தென்காசிக் கோயில், சிறந்த பல சிற்பங்களை யுடையது. கோயில் முகப்பு மண்டபத்திலுள்ள எட்டுப் பெரிய தூண்களிலும் அகோர வீரபத்திரர், மன்மதன், திருமால், துர்க்கை, சட்டைநாதர், இரதிதேவி, தாண்டவமூர்த்தி முதலியவரின் சிற்பங்கள் அற்புத வேலைப்பாடு கொண்டவை. இங்ஙனமே இங்குள்ள பெருமாள் மண்டபத்திலும் 12 சிற்பங்கள் மிகவும் அழகுறக் கண்கவரும் வனப்பினதாய்த் திகழ்கின்றன. இக் கோயிற் கோபுரம் ஒன்பது நிலைகளைக் கொண்டதாய்த் திகழ்ந்திருந்தது.

"ஓங்கு நிலைஒன்ப துற்றதிருக் கோபுரமும்
பாங்குபதி னென்று பயில்தூணும்—தேங்குபுகழ்
மன்னர் பெருமான் வழுதிகண்ட தென்காசி
தன்னிலன்றி யுண்டோ? தலத்து"

எனக் கல்வெட்டுப் பாடல் புகழும் வண்ணம், ஒன்பது நிலைகளை யுடையதாக இருந்த இக் கோயிற் கோபுரம், இதுபோது சிதைந்து நிற்கின்றது. சுமார் 150 ஆண்டுகட்கு முன்னர் நவாபு மன்னர் ஒருவர், இக்கோபுரத்தில் அரசியல் ஆவணங்களை யெல்லாம் வைத்திருந்தார் என்றும், எக்காரணத்தாலோ அந்த அறையில் முதலில் தீப்பிடிக்கத் தொடங்கிப் பின்னர் மேல் தட்டுகளிலும் தீ பரவ நேர்ந்ததனுல் கோபுரம் பழுது பட்டுச் சிதைந்துள்ள தென்றும் கூறுகின்றனர்.

சிவபக்தியிலும் செந்தமிழ்ப் புலமையிலும் சிறந்து விளங்கியிருந்த பண்பாடு மிக்க பராக்கிரம பாண்டிய மன்னன், பிற்காலச் சந்ததியினராய்ப் போதரும் தமிழ் மக்கள் அனைவருக்கும் அடைக்கலம் கூறிவிட்டுச் சென்ற தென்காசிக் கோயில், நமது அறநிலைய ஆட்சித் துறையின் ஆதரவில் திருப்பணி செய்யப் பெற இருக்கும் செய்தி, நம்மனோர் அனைவருக்கும் தேனும் அமுதமுமாய்த் தித்திப்ப தொன்ருகும்.

வரலாற்றுப் புகழ் மிக்கதும், தமிழ் மக்கள் அனைவரும் தம் பொதுமை யுரிமைப் பொருளாகக் கொண்டு பெரிதும் போற்றி வளர்க்கத் தகுவதும், கருங்கல் மனத்தினையும் கரைந்துருகச் செய்யவல்ல கல்வெட்டுப் பாடல்கள் பலவற்றைக் கொண்டதும் ஆகிய தென் காசிக் கோயில், பராக்கிரம பாண்டியனின் சிறந்த பல பண்பாட்டு நலங்களை யெல்லாம் விளக்கும் சீரிய சான்ருக என்றென்றும் நின்ரோங்கி நிலை பெறுவதாக!

---

# தொண்டைநாட்டுத் திருப்பதியநுபவம்

மகாவித்துவான். P. B. அண்ணங்கராசார்ய சுவாமிகள், காஞ்சிபுரம்

( முன் இதழ்த் தொடர்ச்சி )

இவ்வாறு குறுநிலத் தலைமை பூண்ட திருமங்கை மன்னன் (ஆழ்வார்) அரசாங்க காரியத்தைக் குறைவின்றி நடத்தி வருகையில், பகவானது ஆராதனத்திற் காட்டிலும் மிகச் சிறந்தது பாகவ தாராதனமென்று கொண்டு அதிலே யூன்றியிருந்து, தம் அரசனுக்குச் செலுத்த வேண்டிய பகுதிப்பொருளு முட்படச் செல்வ முழுவதையும் செலவிட்டுவர, அச் செய்தியைச் சிலர் சொல்லக்கேட்ட கொற்றவன் கோபங் கொண்டு இவர் பக்கல் திறைவாங்கி வருவதற்காகத் தன் சேவகரை யனுப்பினுன். அவர்கள் வந்து கேட்டதற்கு இவர் காலை பகல் மாலை இரவு நாளை பின்னிட்டு என்பதாகச் சில தவணைகளிட்டுக் காலதாமதம் செய்து வந்தார். பின்பு அச்சேவகர்கள் கடுமையாக நிர்ப்பந்தஞ் செய்யவே, நீலர் வெகுண்டு அவர்களை வெருட்டித் துரத்தினுர். அதனையறிந்த அரசன் சீற்ற முற்றுத் தனது ஸேனுதிபதியை விளித்து ''நீ சென்று பரகாலனைப் பிடித்து வா'' என்று நியமிக்க, அவன் அங்ஙனமே பல சேனைகளோடு வந்து இவரை வளைத்துப் பிடிக்கத் தொடங்க, இவர் ஆடல்மா என்று பிரசித்தமான தமது குதிரையின்மீது ஏறிக்கொண்டு சேனைகளோடு முன்சென்று எதிர்த்துப் பொருது அவனை முதுகுகாட்டி யோடச்செய்ய, அஃதுணர்ந்த அரசன் தானே ஸேனுஸமூகங்களோடு வந்து இவரை வளைய, இவர் தம் படை வலிமையினுல் அப்படைக் கடலைக் கடந்து தமது திறமையைக் காட்டிப் பொருகையில், தாம் அருள் மாரியாதலால் அரசனைக் கொல்லலாகாதென்று சிறிதுகாலம் போர் நிறுத்தி நின்ருர். அதுவே சமயமாக அரசன் தந்திரமாய் நல்வார்த்தை சொல்லிக்கொண்டு அருகில் வந்து 'உமது பராக்கிரமத்தைக் கண்டு மகிழ்ந்தோம்' என்று கொண்டாடி 'விரைவில் கப்பஞ் செலுத்திவிடும்' என்று சொல்லி இவரை மந்திரி வசமாக்கிவிட்டுத் திரும்பிப் போயினன். அந்த மந்திரி இவரைப் பகுதிப் பொருளுக்காகப் பிடித்து ஒரு தேவாலயத்திற் சிறைவைக்க, அங்கு இவர் உணவு இல்லாமல் மூன்றுநாள் பட்டினி கிடக்கையில், கச்சிநகர்த் தலைவனுன பேரருளாளன் இவரது கனவிலே வந்து காட்சிதந்து 'உனக்கு வேண்டிய பொருள் தருகின்ருேம். வா' என்று சொல்லியருளினுன். இவர் அக்கனவை நனவாகவே நம்பி எம்பெருமானது திருவருளுக்கு மகிழ்ந்து பொழுது விடிந்ததும் மந்திரியை நோக்கி ''காஞ்சீபுரத்திலே நிதி இருக்கின்றது அங்கு வந்தால் தருவேன்'' என்று கூற, அவன் அதனை அரசனுக்கு அறிவித்து அநுமதிபெற்றுப் பல பரிவாரங்களால் காவல் செய்து கொண்டு கச்சிப்பதிக்கு இவரை அழைத்து வந்தான். அங்கு இவர் நிதியைத் தேடிக்காணுது கவலைக்கடலில் மூழ்கி மூர்ச்சிக்குமளவிலே பேரருளாளனுகிய வரந்தரும் மாமணி வண்ணன் மீண்டும் கனவில் எழுந்தருளி அபயமளித்து வேகவதி யாற்றங்கரையில் நிதியுள்ள விடத்தைக் குறிப்பிட்டு அருளிச்செய்த பின்பு, இவர் தெளிந்தெழுந்து பொருள் கண்டெடுத்து அரசன் கடமையைச் செலுத்தி மிகுந்த தனத்தைப் பாகவ தாரா தனத்துக்கு வைத்துக் கொண்டார். அதன்பிறகு மந்திரி பொருளைக் கொண்டுபோய்ப் பிரபுவின் முன்னிலையில் வைத்து நடந்த செய்திகளைத் தெரிவிக்க, அவ்வரசன் இவரது மஹிமையை ஆராய்ந்து அச்சமும் ஆச்சரியமுங் கொண்டு உடனே இவரை வரவழைத்து விசேஷமாக உபசரித்து, தான் செய்த பிழைகளையெல்லாம் பொறுத்தருளும்படி பிரார்த்தித்து, அநந்தரம் 'திரௌபதிக்குப் புடவை சுரந்தாப்போல மாயவனருளாற் பெருகிய இப் பொருளைக் கோசகிருஹத்தில் வைக்கலாகாது' என்று துணிந்து அப்பொருள் முழுவதையும் இவரைப் பட்டினிவைத்த பாவந் தீருகைக்காகப் பலப்பல பாகவதர்கட்குக் கொடுத்துப் பரிசுத்தனுயினன் என்று சரித்திர

வரலாறு காண்கிறது. இவ் வரலாற்றின்படி தேவப்பெருமாள் இவ் வாழ்வார்க்கு வரம் தந்தருளினதுபற்றியே அப் பெருமான் வரதராசனென்று பேர்பெற்று இவரால் ''வரந்தரும் மாமணி வண்ணன்'' என்று பாடவும் பெற்றான்.

முக்கியமான வொருவார்த்தை. இம் மகா நகரத்திற்கு முதன்முதலாக வடமொழியில் **காஞ்சீ** என்று திருநாமமுண்டாயிற்று. அதுவே தமிழில் கச்சியென்று திரிந்தது. **காஞ்சீ** என்னும் வட சொல்லுக்கு எது பொருளோ அதுவேதான் கச்சியென்னுந் தமிழ்ச் சொல்லுக்கும் பொருளாக இசையத்தக்கது. **காஞ்சீ** என்னும் நகர்ப் பெயரைப் பற்றிப் புராணம் கூறியுள்ள சுலோகம் வருமாறு;

''கஇதி ப்ரஹ்மணோ நாமதேந
தத்ராஞ்சிதோ ஹரி:
*தஸ்மாத் காஞ்சீதி விக்க்யாதா புரீபுண்ய
விவர்த்திநீ.''*

என்பதாம்.

**க:** என்பது பிரமனது பெயர். அவனாலே பகவான் அடையப்பட்டு ஆராதிக்கவும்பட்ட தலம் என்பதுபற்றிக் காஞ்சியென்று புரிக்குப் பெயராயிற்று என்பது இந்த சுலோகத்தின் பொருள். இதனால் என்ன தேறிற்று? **கச்சி**யென்னுஞ் சொல்லையிட்டுப் பாடின ஆழ்வார்கள் யாவருமே தேவப் பெருமாளைப் பாடினவர்களென்று தேறிற்று. சின்ன காஞ்சீபுரம், பெரிய காஞ்சீ புரம் என வழங்கப் பெறும் இரண்டு பகுதிகட்கும் சேர்ந்தே கச்சியென்னும் பெயர் பொதுவாக வழங்கி வருகின்றது. ''கச்சிவெஃகா'' ''கச்சியட்ட புயகரம்'' ''கச்சி வேளுக்கை'' ''கச்சிப் பாடகம்'' ''கச்சிப் பரமேச்சுர விண்ணகரம்'' 'கச்சிப் பவளவண்ணா' என்று பிற கோவில்களோடு கச்சியென்னும் சொல்லைக் கூட்டியே பாடியுள்ளனராதலால் இம் மாநகரின்கண் தேவப் பெருமாள் சன்னிதிக்கே முக்கியத்துவத்தை ஆழ்வார்கள் காட்டினராயிற்று.

ஆசாரியர்களில் ஆளவந்தார், திருக்கச்சி நம்பி, ஸ்ரீ ரா மா நு ஜ ர், கூரத்தாழ்வான், வேதாந்தவாசிரியர், மணவாள மாமுனிகள் என்னுமிவ்வறுவர் தேவப் பெருமாள் திருவடிகளில் ஈடுபாடு கொண்டவர்கள். முறையே இதனை விளக்குவாம். ஆளவந்தா ரீடுபாடு ஸ்ரீராமாநுஜருடைய திவ்விய சரித்திரத்தில் தொடர்பு பெற்றிருத்தலால் இதற்கு இன்றியமையாத சரித்திரப்பகுதியை எடுத்துக் கொள்வோம். ஸ்ரீராமாநுஜர் ஸ்ரீபெரும்புதூரில் திருவவதரித்து வளர்ந்து கல்விகளைப் பயின்று வருகையில், காஞ்சீபுரிக் கருகான திருப்புட்குழியென்னுந் திருப்பதியில் யாதவப் பிரகாசரென்னும் ஏகதண்டி ஸன்னியாசி யொருவர் பூர்வபக்ஷ வேதாந்த நூல்களைப் பாடங் கற்பிக்கிறாரென்று கேள்விப்பட்டுத் தாமும் அங்கே எழுந்தருளிப் பாடங் கேட்டுவந்தார். தம்முடைய சிறியதாயார் திருக்குமாரரான கோவிந்த பட்ட ரென்பவரையும் தமது கல்விப் பயிற்சிக்குத் துணைவராகக் கொண்டிருந்தார். (பிறகு எம்பாரென்னுந் திருநாமத்தினால் பிரசித்தி பெற்ற ஆசிரியரே கோவிந்தபட்ட ரென்பவர். இவர் மதுரமங்கல மென்னும் அக்ரஹாரத்தில் தோன்றினவர்.) இவ்விருவரும் யாதவப்ரகாசரிடம் வேதாந்த நூற்பொருள்களைக் கேட்டு வருகையில், அவ்வாசிரியர் மாயாவாதி மதத்தைச் சார்ந்தவராகையாலே வேதாந்த வாக்கியங்களுக்குப் பலவிடங்களிற் பொருந்தாப் பொருள்களைப் பகர்ந்து வந்தார். அதனால் அவர்க்கும் ஸ்ரீராமாநுஜர்க்கும் மனவேற்றுமை விளைந்து சிலநாள் பிரிந்திருப்பதும் சிலநாள் சேர்ந்திருப்பதுமான சம்பவம் ஏற்பட்டிருந்தது. நாளடைவில் யாதவப்ரகாசர் காஞ்சீபுரியிலேயே தேவப்பெருமாள் சன்னிதிக்குள் பிரவசனம் செய்து வந்தார்.

அப்போது ஸ்ரீராமாநுஜருடைய பெரும் புகழ் திசைதொறும் பரவியது. **யதார்த்தஜ் ஞானநிதி** யென்னுங் கீர்த்தி (ஸ்ரீராமாநுஜர்க்கு) உலகமெல்லாம் பரவியது. அப்போது ஸ்ரீரங்கத்தில் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தப் பிரவசனம் செய்துகொண்டு தர்சனப்ரவர்த்தகராக எழுந்தருளியிருந்த ஆளவந்தார் ஸ்ரீராமாநுஜருடைய பல்வகைப் பெருமைகளையும் கேட்டு மகிழ்ந்து காஞ்சீபுரஞ் சென்று அவரைக் கடாக்ஷித்து வரவேணுமென்று ஆவல்கொண்டு அங்கு நின்றும் புறப்பட்டு, வழியிடையிலுள்ள திருப்பதிகளை அடைவே சேவித்துக்கொண்டு காஞ்சீபுரி வந்து சேர்ந்து அத்திகிரியுச்சியி லமர்ந்த உயர்வறவுயர் நலமுடையனான அயர்வறுமமரர்களதிபதியைத் திருவடி தொழுது, கீழே திருமடைப் பள்ளிப் பிரதட்சிணத்தில் திருப் புற்றினருகே திருவனந் தாழ்வானையும் கரியமாணிக்கப் பெருமானையும் தொழா நிற்கையில், அங்கே யாதவப்பிரகாசர் தம் திரளுடனே பேரருளாளப்

பெருமாளை ஸேவித்து வலம் வாராநிற்க, ஆளவந்தார் தம் அருகேயிருந்த திருக்கச்சி நம்பியை நோக்கி, 'இத்திரளிலே இளையாழ்வார் (ஸ்ரீராமாநுஜர்) யாவர்?' என்று கேட்க, 'அதோ சிவந்து நெடுகி ஆஜாநுபாஹுவாய் வருபவர்' என்றுகாட்ட, ஆளவந்தாரும் திருவுள்ளம் பூரிப்பக் குளிர நோக்கியருளி "ஆம் முதல்வனிவன்" என்று விசேஷ கடாக்ஷம் செய்தருளி, பேரருளாளப் பெருமாளை நோக்கி 'நம் இராமாநுசர் தர்சன ஸ்தாபகராம்படி அருள்புரியவேணும்' என்று சரணுகதி செய்து கொண்டே தேவப்பெருமாள் விஷயமாக ஒரு சுலோகம் விண்ணப்பம் செய்தார். அதாவது,

> "யஸ்ய ப்ரஸாதகலயா பதிரச் ச்ருணோதி
> பங்கு: ப்ரதாவதி ஜவேற்ச வக்தி மூக:,
> அந்த: ப்ரபச்யதி ஸுதம் லப:தேச வந்த்யா
> தம் தேவமேவ வரதம் சரணம் கதேஸ்மி"

என்பதாம்.

இதன் பொருளாவது, தேவப்பெருமாள் சிறிது அநுக்ரஹம் செய்தவாறே செவிடன் செவிப்புலன் பெறுவன், நொண்டியா யிருப்பவன் ஓடத் தொடங்குவன்; ஊமையாய்ப் பிறந்தவன் விரைந்து பேசத் தொடங்குவன்; பிறவிக் குருடன் கண்பார்வை பெறுவன்; மலடி மக்கட்பேறு பெறுவள்; அத் தேவபிரானைப் புகலொன் றில்லாவடியேன் அடைக்கலம் புகுகின்றேன்—என்பதாம். இஃது ஆளவந்தாரீடுபாட்டின் சுருக்கம்.

இனி ஸ்ரீராமாநுஜரது ஈடுபாட்டை விவரிப்போம். ஸ்ரீராமாநுஜர் யாதவப் பிரகாசர் பக்கலில் பூர்வபக்ஷ வேதாந்தம் பயின்ற செய்தி கீழே தெரிவிக்கப் பட்டதன்றே. அங்ஙனம் பயிலுகையில், இடையிடையில் இவர் தருக்கித்துக் கூறும் சீரிய பொருள்களைக் கேட்டு விடை கூற மாட்டாமல் திகைத்த யாதவப் பிரகாசர் இவரது மேதையின் மாண்பைக் கண்டு மிக வியந்து, இவரால் தமது சமயத்திற்குப் பங்கம் நேரிடுமென்று அறுதியிட்டு, இவரை மாய்க்கும் வகைகளை யாலோசித்து, தாம் பரிவாரங்களுடனே காசியாத்திரை செல்வதாகப் பிரகடனம் செய்தார் யாதவர். தமக்கொரு பாதகம் நேராமல் காசியில் மணிகர்ணிகைத் துறையில் விழத் தள்ளி மாய்ப்பதாக மனத்தினுட்கருத்து. அதை வெளிக்காட்டாது 'காசீயாத்திரை' 'கங்கா யாத்திரை' என்று பறைசாற்றி சிஷ்ய பரிவாரத்துடன் பயணமாயினர்.

ஸ்ரீராமாநுஜரும், அவருடைய சிறிய தாயார் புதல்வராகக் கீழே பிரஸ்தாபிக்கப் பெற்ற கோவிந்தபட்டரும் இந்த யாத்திரையில் கலந்து கொண்டனர். துரிதமாகவே யாத்திரை நடைபெற்று வருகின்றது. விந்தியாடவியென்னும் பெருங் காட்டினருகே செல்லா நிற்கையில், இந்த யாத்திரையின் நோக்கம் இன்னதென்று சில இங்கிதங்களா லுணர்ந்த் கோவிந்தபட்டர் ஓரிடத்திலே ஸ்ரீ இராமாநுஜரும் தாமும் பின்தங்கி, செய்தியை ஸூசனையாக வுணர்த்தி, அகன்றுபோவது நலமென்றறிவித்து ஸ்ரீராமாநுஜரை மீண்டுபோகச் செய்தனர்.

நிர்ஜனமும் நிர்ஜலமுமான நீள் காட்டிலே பிரியலுற்ற ராமாநுஜர் அவ்வழியை விட்டுக் குறுக்கே நெடுந்தூரஞ் சென்று ஒரு மரத்தடியிலே நின்று பார்க்க, கண்ணுக் கெட்டின் வளவு "அங்கோர் நிழலில்லை நீருமில்லை" என்னும்படியான நிலைமையாய் ஒருவரும் துணையின்றிக்கே 'ஆவாரார் துணையென்று அலைநீர்க் கடலுளழுந்தும் நாவாய்போல் துளங்கி' நின்று வழி திகைத்து நிற்கையில், பேரருளாளன் இத்தகைய பரமஸாத்விகர்களை விட்டுக்கொடுக்க மாட்டாதா நெருவனுகையாலே இவர்க்குத் துணைசெய்ய விரும்பி ஒரு வில்லியின் வேடம் பூண்டு வாளும் வில்லுங்கொண்டு மனைவியுடனே வழிப்போக்கன்போல முன்னேவந்து தோன்ற, ராமாநுஜரும் தண்ணளியே வடிவெடுத்த முகங்கொண்ட அத் திவ்விய தம்பதிகளைக் கண்டு கவலை தீர்ந்து உள்ளந்தேறி நின்று 'நீங்கள் எங்கு நின்றும் வருகிறீர்கள்? எங்கே போகிறீர்கள்?' என்று வினவ, அதற்கு அவர்கள் 'நாங்கள் வடநாட்டு ஸித்தாச்ரமத்தினின்று வருகிறோம்; ஸத்தியவிரத க்ஷேத்திரத்தை நோக்கிச் செல்லாநின்றோம்' என்று விடை கூறினர்.

அதுகேட்டு மகிழ்ந்த ராமாநுஜர், 'ஆகில் நானும் உங்களுடனே அவ்விடத்திற்கு வர நினைக்கிறேன்; எனக்குத் துணையாயிருக்கலாமோ? என்று கேட்க, 'நல்லது, அப்படியேயாகலாம்' என்று சொல்லி அவர்கள் முன்னடியிட, ராமாநுஜரும் அவர்களைப் பின்செல்ல,

அந்தப் பெருங்காடு நீங்கி மாலைப்பொழுது மாயிற்று. அப்போது ஓரிடத்திலே தங்கி அனுட்டானங்களை முடித்துக்கொண்டு, நெடுந் தூரம் நடந்து சென்று பின்பு நள்ளிருளா யிருந்ததனால் மேலே வழிநடந்து செல்லமாட்டாமல் அங்கே அவர்களோடுகூடவே பட்டினி கிடந்தார் ஓர் மரத்தடியின்கீழ்.

அப்போது வில்லியின் மனைவி விடாய் மிகுதியினால் தண்ணீர் தண்ணீரென்று கணவனிடங் கூற, அவனும் 'இப்போது தண்ணீர் கிடைக்கவில்லையே, சிறிது ஆறியிரு; விடிந்தவாறே நல்ல மதுரமான தீர்த்தம் கிடைக்கும்' என்று சொல்லித் தேற்றினான். அப்போது ராமாநுஜரின் திருவுள்ளம் மிகவும் வருத்தமுற்றது; 'அந்தோ! நமக்குப் பேருதவி புரியுமிவர்களுக்கு நாம் விடாய் தீர்க்கும்படியான நிலமாக இல்லையே!' என்கிற வருத்தத்துடனே சிறிது போது திருக்கண் வளர்ந்திருந்தார். பிறகு கனவிருளகன்று கீழ்வானம் வெள்ளென்று காலையம் பொழுதானவாறே மூவருமெழுந்து வழிநடக்கத் தொடங்க, அந்தத் தம்பதிகள் அருகேயொரு கிணற்றங் கரையிலே அழைத்துக் கொண்டு போய் விட்டு, ராமாநுஜரை நோக்கி 'அருள் முகிலே! மிகவும் விடாய்த்திருக்கின்றோம், இக்கிணற்றிலே யிறங்கி ஒரு கை அள்ளித் தீர்த்தம் தருவீராக' என்ன, ராமாநுஜரும் உடனே கிணற்றி லிறங்கி இரு திருக் கைகளாலும் தீர்த்தம் வாரியெடுத்து மூன்று தரங் கொடுக்க, அவர்களும் வாங்கி விடாய் தீரப் பருகி உருக் காட்டாதேயொளிக்க இவரும் கரையேறி வந்து பார்த்தவாறே எங்குந் தேடியும் அவர்களைக் காணாமல் சுற்றிலுங் கூப்பிட்டுத் திசைகளை யுற்றுப் பார்க்கையில், மாடமாளிகைகளும் கோபுரங்களும் விசேஷ ஜன ஸஞ்சாரங்களுங் காணப்பட, முன்னே தோற்றின சிலரை நோக்கி இவ்விட மெவ்வூரென்று கேட்க; 'புண்ணிய கோடி விமானம் முன்னே தோற்ற நிற்க எவ்வூரென்று கேட்பதென் கொல்? இது சாலக் கிணறன்றோ, கச்சிப்பதியன்றோ' என்று அவர்கள் சொல்ல ராமாநுஜர் மிகவும் ஆச்சரியப்பட்டு, வழித் துணையான வில்லிகளைப் பேரருளாளனும் பெருந் தேவித் தாயாருமாகப் பிரதிபத்தி பண்ணி 'என்கொலம்மான் திருவருள்கள்!' என்று தலை சீய்த்து 'உருக்காட்டாதே யொளிப்பாயோ!' என்று பல்கால் கூறிப் புலம்பி ஒருவாறு உள்ளந் தேறியெழுந்து சென்று ஸன்னிதியுள்ளே பேருளாளனையும் பெருந்தேவித் தாயாரையும் புன்முறுவல் பூத்த திருமுக மண்டலத்துடனே காட்சி தரக் கண்டு, அன்று முதலாக நாடோறும் தேவப் பெருமாளது திருவுள்ளத்திற்குப் பாங்காகத் திருவாராதனத்திற்கு சாலக்கிணற்றினின்றும் தீர்த்தங் கொணர்ந்து ஸமர்ப்பித்து வந்தார். இதைத் திருவுள்ளம் பற்றியே திருவரங்கத் தமுதனார் இராமாநுச நூற்றந்தாதியில் 'காண்டகு தோளண்ணல் தென்னத்தியூரர் கழலிணைக் கீழ்ப் பூண்ட அன்பாளன் இராமானுசன்' என்று பொறித்து வைத்தார். ஸ்ரீ வேதாந்த தேசிகனார் யதிராஜ ஸப்ததியில்

''தத்தம் யேந தபாஸ்தாம்புநிதிநா பீத்வா
விசுத்தம் பய: காலேந: கரிசைல
க்ருஷ்ணஜலத: காங்ஷாதிகம் வர்ஷதி''

என்னும் சுலோகத்தினால் இவ் வைதிஹ்யத்தை விளங்கக் காட்டியுள்ளார்.

(தொடரும்)

---

# அறநிலைய அமைச்சர் கலந்து கொண்ட நிகழ்ச்சிகள்

30-6-63 ஸ்ரீ கள்ளழகர் கோயில் குடி நீர் வழங்கு திட்டத்திற்குக் கால் கோள் விழா.

,, பழநியில் கலைக் கல்லூரித் திறப்பு விழா.

5-7-63 திருக்குற்றாலத்தில் சாரல் மாநாட்டுத் தொடக்க விழா.

9-7-63 தஞ்சாவூரில் ஹரிகதாகாலக்ஷேபப் பயிற்சி பள்ளித் தொடக்க விழா.

# ஸ்ரீ வைஷ்ணவ குருபரம்பரை

திரு. K. பட்சிராஜன், B.A.,B.L.,
திருநெல்வேலி

( முன் இதழ்த் தொடர்ச்சி )

இளையாழ்வார் துறவு பூண்ட வைபவங்கள் எல்லாம் திருவரங்கத்தில் உள்ள வைஷ்ணவர்களுக்கு எட்டியதும், அவர்கள்,

"ஆடினார்கள் தென்னரங்கன்தாளை
யன்று சென்னியிற்
சூடினார்கள் வேதமாதி
சொற்றெரிந்து பண்முறை
பாடினார்களங்கு மிங்கு
மந்திரம் பகர்ந்தெழுந்
தோடினார்கள் அன்பரின்பமுற்ற
தென்னுரைப்பதே."

திருவரங்கம் முழுவதும் ஒரே மகிழ்ச்சி; அதிலும் யாதவப் பிரகாசன் ஒருக்கால் தனது சீடனாயிருந்த இளையாழ்வாரின் திருவடி சம்பந்தம் பெற்று "முக்கோல் பகவன்" ஆனான் என்ற செய்தி அவர்களுக்கு மேலும் மகிழ்ச்சியை ஊட்டியது. எல்லாவற்றுக்கும் சிகரமாகக் கந்தாடை முதலியாண்டானும், கூரத்தாழ்வானும் இராமாநுசரின் (இளையாழ்வாரின்) சீடர்கள் ஆனார்கள் என்ற செய்தி அவர்கள் உள்ளங்களை மகிழ்ச்சியால் நிரப்பின. அவர்கள் அனைவரும் ஒரு சேரத்திரண்டு நேரே பெரிய நம்பியைப் போய் சேவித்து, "சுவாமி, தேவரீர் திருவுள்ளத்திற்கு உகந்த செய்தி கொண்டு வந்துள்ளோம். ஸ்ரீ காஞ்சியிலே இளையாழ்வார் பேரருளாளனிடத்தில் துறவறம் ஏற்று, "இராமாநுசமுனி" என்ற திருநாமம் பூண்டு எழுந்தருளியிருக்கிறார். இவர் மனம் கன்றும்படி செய்து, இவருக்குப் பல இன்னல்களையும் விளைவிக்க முயன்ற யாதவப் பிரகாசன் இவர் திருவடி சம்பந்தம் பெற்றுத் திரிதண்டி (முக்கோல் பகவர்) ஆனான். இப்பொழுது அவர் திருநாமம் கோவிந்தசீயர் என்பது. முதலியாண்டானும், கூரத்தாழ்வானும் இராமாநுசரின் சீடர்களாகி உள்ளனர் என்று விண்ணப்பித்தனர். பெரிய நம்பிகள் முகமலர்ந்து கண்கள் ஆனந்தக் கண்ணீர் பொழிய, அச்செய்தியை ஏற்றுத் தம் குருநாதர் ஸ்ரீ ஆளவந்தாரையும், பெரிய பெருமாளையும் தம்மனத்தே இருத்திக் கை கூப்பினார். மகிழ்ச்சி நிறைவால் அவர் வாய் திறந்து ஒன்றும் கூற இயலவில்லை. அம்மகிழ்ச்சிக் கடலில் அவர் சிறிது நேரம் திளைத்திருக்க, வந்த முதலிகள் மிகுந்த பரபரப்போடு "என்ன சுவாமி! இந்நற் செய்தி கேட்டும், தேவரீர் இன்னும் வாளா இருக்கலாமா? நாம் உடனே சென்று அவரை இங்கே எழுந்தருளுவித்துத் திருவரங்கம் திருவோலக்கத்தை இன்னும் திருவுறச் செய்து, நம் ஆளவந்தாரின் திருவுள்ளக் கிடக்கையையும் முற்றுவிக்க வேண்டாமா? தேவரீர்தானே இதைச் சாதிக்க வேண்டும்?" என்று ஒரு முகமாக விண்ணப்பித்தனர். பெரிய நம்பியும் முறுவலோடு திருக்கண் மலர்ந்து "நன்று சொன்னீர்கள் முதலிகளே! அமுதம் போன்று நீங்கள் கொண்டு வந்த செய்தி கேட்ட இன்பப் பெருக்கிலே திளைத்து நான் என்னையே சிறிது மறந்து விட்டேன். உங்கள் உள்ளத்திலே உண்டான கோரிக்கை அவசியம் செய்து தலைக்கட்ட வேண்டியதே. அதில் எனது பொறுப்பை யான் உணர்ந்தே இருக்கிறேன். வாருங்கள், பெரிய பெருமாளிடம் செல்வோம்" என்று அருளி எழுந்து, முதலிகள் பின் தொடர, நேரே நம்பெருமாள் சன்னிதிக்கு எழுந்தருளினார்,

அங்கே பெரிய பெருமாள் திருமுன்பே திரு வரங்கப் பெருமாளரையர், பெரியநம்பி இவர் களை முன்னிடு வித்து முதலிகள் அனைவரும் நம்பெருமாளை வணங்கிக் கூப்பிய கையராய் அவரை நோக்கி "எம்பெருமானே! இளையாழ் வார் இப்போது,

" சன்னியாதங் கைக்கொண்டு
தயங்கு கச்சிமாநகரில்
மன்னிவாழா நின்றனன் அம்
மானுபாவன் நாதமுனி
உன்னி வகுத்த தெரிசனத்துக்
கோங்குமதிபனென வுரைத்தார்
முன்ன மாளவந்தா ரெம்
மூவர் முதலே நீயவனை."

"விரைவிலழைத்தித் தலத்தாக்கி
வேண்டுமுறுதி யாளவந்தார்
தரையிலவற்கென் றெங்களிடை
வைத்துப் பரமபதஞ் சார்ந்தார்
உரையும் பொருளுமெங்களைக் கொண்
டவனுக்கிறைவ னேதுவித்துப்
புரையொன்றின்றி யெம்மொடவன்
பொருந்தும் வண்ணமருள்."

ஐயனே! இந்த தரிசனத்திற்கு "இளையாழ் வாரே தலைவர்" என்று ஸ்ரீ ஆளவந்தார் நிய மித்துப் போனர். ஸ்ரீ ஆளவந்தார் தேவரீர் திருவுள்ளம் அறிந்தவரன்றோ! ஆகவே அவ ருடைய நியமனம் தேவரீருடைய நியமனம் தானே. இளையாழ்வாரும் அத்தலைமை தாங்கும் தகுதி பெற்று "இராமாநுச முனி" ஆகிவிட்ட னரே! அவரை ஸ்ரீ காஞ்சியிலிருந்து தேவரீர் சன்னிதிக்கு எழுந்தருளச் செய்து தரிசனத்தை ஏற்று நடாத்தத் திருவுள்ளமாக வேணும் என்று ஒரு மிடருகப் பிரார்த்தித்தனர். பெரிய பெருமாளும் அவர்கள் வேண்டுகோளை உகப்புடன் ஏற்றுக் கொண்டார். பெரிய பெரு மான் நியமனப்படி முதலிகளும், தலத்தாரும் பெரிய பெருமாள் திருவுள்ளத்தை எழுதி இளை யாழ்வாருக்கு ஒரு திருமுகம் விடுத்தனர். இரண்டு ஸ்ரீ வைஷ்ணவர்கள் அந்த ஸ்ரீமுகத் தை ஏந்திப் பெருமாள் கோயிலைச் சேர்ந்து, இராமனுசர் திருவடிகளை வணங்கித் தாங்கள் வந்த வரலாற்றைக் கூறித் திருமுகத்தையும் நீட்டினர். இளையாழ்வார் தண்டனிட்டு எழுந்து நின்று திருமுகத்தை ஏற்று அதன் பொருளை உணர்ந்து உள்ளம் பூரித்தார். பின் னர் இராமாநுசர் திருக்கச்சி நம்பிகளிடம் சென்று திருமுகம் வந்த செய்தியை விண்ணப் பித்து "சுவாமி! இதனைப் பேரருளாளனிடம் விண்ணப்பித்து அனுமதி கேட்டருள வேணும் என்று பிரார்த்தித்தார். திருக்கச்சிநம்பி வரத ளிடம் இதனை விண்ணப்பிக்க,

" அங்கது கேட்டருளாள ரவனியின்
கணைது வரினும்
தங்கள் தங்கள் பெண்டுகளைப்
புறம்போக்கல் தக்கதுவோ
பொங்கு கடலுலகத்தார்
புகல்வரிது போம்"

நம்பி, தம் உயிர்க்குயிரான பொருளை யாரேனும் விட்டுப் பிரியச் சம்மதிப்பார்களா? தத்தம் அபிமானத்தை ஒருவன் புறம்போக விடிலன்றோ நாமும் நம் இராமாநுஜனை விடு வது என்று அருளாளர் நம்பிக்குப்பதிலிறுத்தார். நம்பி இதனை இராமாநுசருக்குக் கூற அவரும் திருமுகம் கொணர்ந்தோரிடம் அருளாளன் திருவுள்ளத்தைக் கூறி "நீசனேன் என் செய் கேன்? நெடுமாலுக்கு (பெரிய பெருமாளுக்கு) இத்திறத்தைப் பேசும் என" அவரை விடுத்த னர். அவர்களும் மிகவும் மனம் நொந்தவர் களாய் கோயிலுக்குத் திரும்பினர்.

அவ்விருவரும் சென்று வந்த விருத்தாந் தங்களைப் பெரியநம்பி துடக்கமான முதலிகளும், தலத்தாரும் கேட்டு இராமாநுசரைத் தருவிக் கும் விரகு ஏது என்று ஆலோசித்து ஒன்றும் புலப்படாமையால், "சரி. பெருமாளையே சரண் புகுவோம்" என்று நம்பெருமாள் சந்நிதியை அடைந்தனர். நம்பெருமாளைச் சேவித்துத் திரு முகம் அனுப்பிய வரலாற்றையும், அருளாளன் உள்ளக் கிடக்கையையும் பெருமாளிடம் விண் ணப்பித்து தேவரீர்தான் எங்கள் கோரிக்கை பூர்த்தியாக ஒரு வழி காட்டியருள வேணும் என்று பிரார்த்தித்தனர். நம்பெருமாளும் புன் முறுவலுடன் அவற்றை யெல்லாம் கேட்டு,

" சீரார் ஆழ்வார் திருவரங்கப்
பெருமாளரையர் தமைக்கூவி

"ஏரார் கச்சி யருளாளர் இனியாழ்
வானையாம் கேட்டால்
தாரார் நீயிர் போய் அவரைச்
சந்தோடிக்கும்படி பாடிப்
பூராயத்தால் கொணர் மின்."

என நியமித்தார். முதலிகளும் தம்மிலே ஆராய்ந்து திருவரங்கப் பெருமாள் அரையரே இதற்குத் தக்கவர் என நிச்சயித்து அவரைத் தண்டம் சமர்ப்பித்து அவரை நோக்கி "சுவாமீ, இது செய்யக்கூடியவர் தேவரீர் ஒருவரே. பெருமாளும் தேவரீரைக் கூவியன்றோ நியமனம் அருளினர்! தேவப் பெருமாள் பரம உதாரராயும், பாட்டுக்குப் போர நல்லராயிருப்பர் என்று நாம் அறிவோம். தேவரீர் சென்று இசையினால் அப்பெருமானை உகப்பித்து இராமாநுசரைப் பெற்று அடியோங்களைத் தழைக்க அருள் புரிய வேண்டும்" என்று விண்ணப்பித்துக் கொண்டனர்.

அவரும் முதலிகள் வேண்டுகோளை ஏற்றுப் பெரிய பெருமாளைச் சேவித்து விடை கொண்டு ஸ்ரீ காஞ்சிக்குப் பயணம் ஆனர். காஞ்சியில் அவரை வரந்தரும் பெருமாள் அரையர் மிக்க விமரிசையாக எதிர்கொண்டு தம் திருமாளிகையிலே எழுந்தருளப் பண்ணினர். திருவரங்கப் பெருமாளரையரும் அன்றிரவு அங்கே தங்கினர். மற்றை நாள் காலையில் பேரருளாளன் வைய மாளிகையிலே (கோயிலிலே) "கச்சிக்கு வாய்த்தான்" என்ற திருமண்டபத்திலே அணைத்துக் கொத்திலுள்ள பரிகரமும் சேவிக்க எழுந்தருளி யிருந்தார். ஒரு புறம் திருக்கச்சி நம்பி திரு ஆலவட்டம் பரிமாறிக் கொண்டிருந்தார். அவர் அருகே இராமாநுஜர் கூப்பிய கையராய் நின்று திருக்கச்சி நம்பி அருளிச் செய்த "வரதராஜாஷ்டகம்" என்ற தோத்திரத்தை அனுசந்தானம் பண்ணிக் கொண்டு நின்றார். இவ்வேளையிலே திருவரங்கப் பெருமாளரையர், வரந்தரும் பெருமாள் அரையர் முதலியோர் சூழ சன்னிதிக்கு எழுந்தருளினர். தூரத்தே அவர் வருவதைக் கண்ட திருக்கச்சி நம்பி அவரை எதிர்கொண்டு, அவர் திருவடிகளிலே தண்டனிட்டார். திருவரங்கப் பெருமாளரையரும் திருக்கச்சி நம்பிகள் திருவடிகளிலே ஸாஷ்டாங்கமாகத் தண்டனிட்டார். பின் இருவரும் ஒருவரை யொருவர் நலம் வினவிக் கொண்டனர். நம்பியும் அரையர் வந்த காரியம் வினவ அரையரும் "பேரருளாளனை சேவிக்க வந்தேன் என்று கூறி நம்பியை முன்னிட்டுக் கொண்டு" கச்சிக்கு வாய்த்தான் மண்டபத்துக்கு எழுந்தருளினர். அங்கு திருவரங்கப் பெருமாளரையர் அருளாளனை அடிமுடியாக நன்கு சேவித்து "நல்லோர் தீயோர் வாசியறத் தேவரீர் திருவடிகளின் பெருமையைக் கூடக் கணிசியாமல் எல்லார் சிரசிலும் திருவடிகளை வைத்தளந்த திருவிக்கிரம! சங்கு சக்கரம், கற்பகம், பதாகை, அரவிந்தம், அங்குசம், வஜ்ரம் முதலான ரேகைகள் பொருந்திய அக இதழையுடைய தேவரீர் சரண கமலங்களை இதுகாறும் நித்திய சம்சாரிகளை ஆசிரயித்திருந்த அடியேனுடைய புன்றலைமேல் எப்போது மீண்டும் தரித்து அடியேனைக் கிருதார்த்தனுக்கி அருளப் போகிறீர்" என்று பொருள் படும் "கதா புநச் சங்க ரதாங்க கல்பக த்வஜார விந்தாங்குச வஜ்ர லாஞ்சநம்—த்ரிவிக்ரம த்வச்சரணம்புஜத்வயம் மதீய மூர்த்தானம் அலங்கரிஷ்யதி" என்ற ஸ்ரீ ஆளவந்தார் தோத்திரத்தைத் தமக்குள்ளேயே இசையுடன் அனுசந்தித்து நின்றார். பெருமாள் நியமனப்படி திருமாலை, திருப்பரியட்டம், தீர்த்தம் பிரசாதம் ஸ்ரீசடகோபன் முதலியன பிரசாதிக்கப் பட்டன. அரையரும் இப்பேற்றை எண்ணி "உன் திருப்பொலிந்த சேவடி என் சென்னியின்மேல் பொறித்தாய் என்று விண்ணப்பித்து மகிழ்ச்சி நிறைந்த மனதுடன் நின்றார். அவர் ஸ்ரீஆளவந்தார் ஸ்தோத்திரத்தை அனுசந்தானம் செய்யும்போது, அவ்விசையின்பத்தைக் கேளாதே கேட்க வல்லனை எம்பெருமான் கேட்டவனுதலால் அவரை "வருக" என்று அருளப்பாடிட்டுத் தம் திருமுன்பே பாடும்படி நியமித்தருளினர். அரையரும் பெருமாள் நியமனத்தை ஏற்றுப் பக்தி மேலிட,

"என்னெஞ்சம் மேயான் என்சென்னியான்
தானவனை
வன்னெஞ்சம் கீண்ட மணிவண்ணன்—
முன்னம்செய்
ஊழியான் ஊழி பெயர்த்தான் உலகேத்தும்
ஆழியான் அத்தி யூரான்"

"துணிவு இனி உனக்குச் சொல்லுவன் மனமே!
தொழுதெழு தொண்டர்கள் தமக்குப்
பிணியொழித்து அமரர் பெருவிசும்பருளும்
பேரருளாளன் எம் பெருமான்"

"பிணியவிழ் தாமரை மொட்டலர்த்தும்
பேரருளாளர் கொல்? யான் அறியேன்
பணியும் என்நெஞ்சமிதென் கொல்? தோழீ!
பண்டுஇவர் தம்மையும் கண்டறியோம்
அணிகெழு தாமரை யன்ன கண்ணும்
அங்கையும் பங்கயம், மேனிவானத்து
அணிகெழு மாமுகிலேயும் ஒப்பர்
அச்சோ ஒருவரழகி யவா!"

என்று "பாலேய் தமிழில்" வரும் ஆழ்வார் களின் திவ்ய சூக்திகளான "பண்ணூர் பாடல் இன்கவிகளைத்" தேவகாநத்திலே நாடக அபி நயத்தோடு,

"மண்ணெலா முருகக் கல்லெலா
முருக மரங்களும் புற்களு முருக
விண்ணெலா நிறைந்த வமரரு முருக
விரிஞ்சனு நக்கனு முருகக்
கண்ணெலா மருவிபாய விந்திரனுங்
கனலுறு மெழுகெனக் கரையப்
பண்ணெலா மெடுத்துப் பாடின ரரையர்
பங்கயக் கண்ணனும் மகிழ்ந்தான்"

இங்ஙனம் மகிழ்ந்த பேரருளாளர் அரை யரை உவந்து, கொண்டாடி தாம் சாத்திக் கொண்டிருந்த திருமுகத்தின் தாழ்வடம், திருப் பரிவட்டம், இரு சாமரங்கள், சிவிகை, மற்றும் ஆபரணங்கள் ஆகியவற்றையெல்லாம் அவ ருக்கு வரிசையாக அருளினர். ஆனல் அரை யர் அவை ஒன்றையும் ஏற்காமல் பெருமாளைத் தண்டனிட்டு, கைகூப்பி "நாயன்தே! அடியே னுக்கு இவை ஒன்றிலும் அபேக்ஷை இல்லை எம்பெருமானே!"

"ஒருவனை ஒருவன் பாடினல், உவந்தால்,
வேண்டுவது என்னென உரைத்துத்
திருமகள் தலைவா பாடிய புலவன்
செப்பியது அளிப்பர்கள் உலகில்
மருவரும் புகழாய் ஐது நொய்தாகப்
பாடினல் மகிழ்ச்சி யற்றவர்கள்
தருவது போலத் தந்தனை"

எனவே தேவரீர் திருவுள்ளம் அடியேன் கானத்தில் இன்னும் நிறை மகிழ்ச்சியுறவில்லை என்றே உணர்கிறேன். ஆகவே மீண்டும் பாடுகிறேன் என்று மீண்டும் மிக உருக்கமாகப் பாடினர். அருளாளன் அரையர் உள்ளக் கிடக்கையை அறிந்தும் அறியாதவன் போல் அவர் கானத்தை ரசித்து, பின்னர் அவரை அருளப்பாடிட்டு "அரையரே உமது கானம் கேட்டுப்போர உகந்தோம். நம் திருமகள் மண் மகள் தவிர எதனை வேண்டினும் அளிக்கி ரோம்" என்று அருளினன். திருவரங்கப் பெரு மாளரையர் தாம் வந்த காரியம் நிறைவேறி விடும் என்ற மன நிறைவுடையவராய் அங்கே அருகிலே நின்ற இராமாநுசரைச் சுட்டி "இவ ரை அடியேனுக்குத் தந்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்தார். அருளாளன் "அரை யரே! இவரை யொழிய வேறு எதனையும் கேளும்" என்று கூவினர். அரையர் சுவாமி "ராமோ த்விர் நாபிபாஷதே" என்பதல்லவா தேவரீருடைய பெருமை, அப்படிப்பட்ட தேவ ரீர் முதற் சொன்ன வார்த்தையை மாற்றுவ தான இரண்டாம் சொல்லை விளைக்கலாமா! "பாவியேன் தோன்றிப் பாம்பணையார்க்கும் தம் பாம்பு போல் நாவும் இரண்டுளவாயிற்று நாணிலியேனுக்கே" என்றாற் போல் அடியேன் அத்துணை பாக்கியஹீனன் போலும் என்று மனச் சோர்வோடு விண்ணப்பிக்க அருளாள னும் வேறு வழியின்றி இன்னுப்புடன், மனச் சலிப்போடு "ஆனல் தந்தோம். அரையரே வருந்தாதீர்" என்று அருளிச்செய்தான். அரை யரும் பேரருளாளனைச் சேவித்து இராமாநுச ரின் திருக்கரங்களைப் பற்றிக் "கோயிலுக்கு எழுந்தருள வேணும்" என்று வேண்டினர். நிகழ்ந்தவைத் யனைத்தையும் நேரே நின்றுப் கண்டு கேட்ட இராமாநுசர் ஒன்றும் பேசாது பேரருளாளனைப் தண்டம் சமர்ப்பித்து நிற்கத் பேரருளாளரும்,

"சந்ததி யில்லா மனையது போலே
தடமுலை யில்லா மடமகள் போலே
செந்தனை யில்லா ஆகுதி போலே
தேசிகனில்லா ஓதுகை போலே
சந்திர னில்லாத் தாரகை போலே
சதமகனில் வானுலகம் போலே
எந்தன் இராமாநுச முனிபோனல்
இந்நகர் தானினி யெப்படியாமோ!"

# திருக்கோயில் அமைப்பு முறை

திரு. ம. வெ. மு. நாகராஜக் குருக்கள்,
சிறுதையூர், லால்குடி.

" உரைசேரும் எண்பத்து நான்கு
நூருயிரமாம் யோனிபேதம்
நிரைசேரப் படைத்து அவற்றின்
உயிர்க் குயிராய்
அங்கங் கேநின்ருன் கோயில் "

என்ற தேவாரப் பாடலில் சம்பந்தர் 'எல்லா உயிர்களிடத்தும் இறைவன் உயிர்க்குயிராய் நின்று அவ்வுடலையே கோயிலாகக் கொண்டுள்ளார்' என்ற கருத்தைக் காட்டியுள்ளார்கள். "வானுகி நிலனுகி அனலுமாகி மாருதமாய் இரு சுடராய் நீருமாகி ஊனுகி உயிராகி உணர்வுமாகி உலகங்கள் அனைத்துமாகிய உலகுக்கப்பால் ஆறுதவடிவாகி நின்ற" சிவபெருமானுக்கு, அறிவும் அன்பும் மிகுந்த பெருமக்கள் அகங்குழைந்து அமைத்த திருக்கோயில்கள் தமிழ் நாட்டில் மிகப் பல. ஆண்டவனது ஆலயத்தையும் அரச இல்லங்களையும்" "கோயில்" என்ற சொல்லால் குறிப்பது வழக்கம். கோ—அரசன். இல்—இருப்பிடம். இளங்கோ அடிகள் தாமியற்றிய சிலப்பதிகாரத்தில் சிவாலயத்தை "பிறவாயாக்கைப் பெரியோன் கோயில்" எனவும், அரச இல்லங்களை "பாண்டியன் கோயில்" 'கோப்பெருந்தேவி கோயில்' என்றும் குறிப்பிட்டார்கள்.

மண்ணுலகை ஆளும் அரசனைக் காட்டிலும் எல்லா உயிர்களையும் ஆளும் கடவுள் மேம்பட்டவர். ஆகையால்தான் மிகப் பழமையான திருக்கோயில்களை மண்ணுண்ட முடிவேந்தர்களே அமைத்துள்ளமையைக் கல்வெட்டுகள் சான்று பகருகின்றன. மதுரை, திருச்சிராப்பள்ளி, திருவானைக்கா, தஞ்சை, முதலிய மிகப் பழம்பெரும் கோயில்களெல்லாம் தமிழ் வேந்தர்களால் அமைக்கப் பட்டனவேயாகும்.

---

ஸ்ரீ வைஷ்ணவ குருபரம்பரை ... ... ...

என்று தன் அங்கலாய்ப்பை வெளியிட்டு இராமாநுசனைத் தனித்து நோக்கி "சரி திருவரங்கத்திற்குச் சென்று வாரும்" என்று பிரியாவிடை கொடுத்தருளினுர். இராமாநுசரும் மீண்டும் அருளாளன் அடியிறைஞ்சித்திருவரங்கப் பெருமாள் அரையருடன் கோயிலுக்குப் புறப்படத் தயாரானுர். அதற்கு முன் முதலியாண்டானையும் கூரத்தாழ்வானையும் கடாக்ஷித்து "நீங்கள் மடத்துக்குப் போய் நமது திருவாராதனமான தேவப் பெருமானை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு வாருங்கோள்" என்று அருளிச் செய்தார். அவர்களும் அவ்விதமே எழுந்தருளுவித்துக் கொண்டு இவரைக் கூடினவளவிலே இராமாநுசரும், அரையரும் திருக்கச்சி நம்பிகளிடம் விடை பெற்றுக் கொள்ள, அவரும் இவர்களை வழியனுப்ப அனைவரும் திருவரங்கம் நோக்கிப் பயணமாயினர்.

திக்கு நோக்கித் திரும்பித் திரும்பியே
தேவராசர் தம் கோயிலை நோக்கியே
செக்கர் மேனி மிகப்பெரும் கைகளால்
சேர்ந்த கண்கள் பனிநீர் தெறித்திட
மிக்க கோயில் பெருவழி தன்னிலே
வேதம்வல்ல மறையவர்தம் முடன்
புக்ககம்புகப் போயிடும் பெண்கள்போல்
போயினுர் பெரும்பூதூர் முனிவனுர்.

(தொடரும்)

## 2

சிவன் கோயில்களை எப்படி அமைக்க வேண்டும் என்பதுபற்றிய விரிவான கருத்துக்களைச் சிவாகமங்கள் வெளியிடுகின்றன. ஆலய அமைப்பிற்கு வேண்டிய அளவுமுறைகள், கற்சிலைகள் பற்றிய இலக்கணங்கள், கோயிலின் தோற்ற அமைப்புகள், மண்டபங்கள், சுற்றுப் பிராகாரங்கள், இராஜ கோபுரங்கள் இவைகளை அமைக்கும் முறைகளும் ஆகமங்களில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. ஆகமங்களினின்றும் இக் கருத்துக்களை அறிவோமானால் நாம் காண்கின்ற கோயில்களுக்கும் ஆகமப் பொருளுக்குமுள்ள ஒற்றுமை அல்லது வேற்றுமை நமக்குப் புலனாகும். தமிழில் ஆகமம் செப்பவந்த திருமூலரடிகள் தாம் பெற்ற ஒன்பது ஆகமங்களின் பெயர்களைக் குறிப்பிடும் திருமந்திரப் பாடலில் முதலாவதாகக் "காரணம்" என்ற ஆகமத்தின் பெயரையே கூறினர். திருக்கோயில் தோற்ற அமைப்புபற்றிக் "காரணம்" என்ற ஆகமத்தில் காணப்படும் கருத்துக்கள் இக் கட்டுரையில் ஆகமப் பிரமாணத்துடன் தமிழில் எடுத்துக் காட்டப்படுகின்றன.

சிவபெருமான் வீற்றிருந்து அருள்புரியும் இடமான திருக்கோயில்கள் மிகத் தூய்மையான—மனச் சாந்தியைத் தரும் மனோரம்மியமான பூமிகளில் அமைக்கப்பட வேண்டும், புனிதமான தேவாலயங்களைக் கட்டுவதற்கேற்ற நிலத்தின்கீழ் இறந்தோரின் உடலுறுப்புகளாகிய எலும்புகள், நகங்கள், மயிர் முதலிய இழிந்த பொருள்கள் எதுவும் இருக்கலாகாது; இத்தகைய அருவருப்பான பொருள்களை மிக ஆழமாக அகழ்ந்தெடுத்து அப்புறப்படுத்த வேண்டும்; என்றெல்லாம் **கர்ஷணவிதி** என்ற பகுதியில் சொல்லியபிறகு திருக்கோயில் அமைப்புமுறை கூறப்படுகிறது.

## 3

திருக்கோயிலின் முக்கியமான பகுதி கர்ப்பக் கிருஹமும் இதன் மேலுள்ள விமானமுமேயாகும். எங்கும் நிறைந்த இறைவன் மூலவராக எழுந்தருளியுள்ள கர்ப்பக் கிருஹத்தை "மூலஸ்தானம்" என்று சொல்லப்படுகிறது. இம் மூலாலயத்தை முதலாவதாகக் கொண்டே முறையே அர்த்தமண்டபம், மஹா மண்டபம், ஸ்நாந மண்டபம், அலங்கார மண்டபம் முதலிய மண்டபங்களும் ராஜ கோபுரங்களுடன் கூடிய சுற்றுப்பிராகாரங்களும் விரிவாக அமைக்கப்படுகின்றன. "ஆலய அமைப்பிற்கென **1. மானுங்குலம். 2. மாத்திராங்குலம். 3. தேஹலப்தாங்குலம்** என்ற மூன்றுவகை அளவுகள் காரணாகமத்தில் கூறப்படுகின்றன. மானுங்குலம் என்ற கை முழ அளவுகொண்டு திருக்கோயில்களைக் கட்டவேண்டும்; யாகசாலை, குண்டம், வேதி-சிருக்கு, சிருவம், முதலிய வேள்விக்கு வேண்டுவனவற்றை "மாத்திராங்குலம்" என்ற அளவால் அமைக்கவேண்டும்; தெய்வ வடிவங்கள், அழகிய சிற்பங்கள், மற்ற பிரதிமைகள் இவைகளை எல்லாம் "தேஹலப் தாங்குலம்" என்ற அளவு முறையை நன்கு அறிந்து அதன்வழி அமைக்கப்பட வேண்டும்; என்பது ஆகமங்களின் கோட்பாடு.

உயிர்நிலை போன்ற மூலவர் எழுந்தருளும் மூலஸ்தானக் (கருவறை) கோயிலின் தோற்ற அமைப்புகளை முதலில் அறிந்து கொள்வோம். **1. நாகரம் 2. திராவிடம் 3. வேசரம்** என்ற பெயருள்ள மூவகைப்பட்ட கோயில் தோற்றங்களை ஆகமம் காட்டுகின்றது.

அவையாவன :

**நாகரம் திராவிடம் சைவ**
**வேசரஞ்சதிரி தாபவேத்**
**பௌமாதிஸ் தூபிபர் யந்தம்**
**யுகாச்ரம் நாகரம்பவேத்**
**வேதிப்ர பிருதி சாஷ்டாசிரம்**
**திராவிடம் சேதிகீர்த்திதம்**
**கர்ணப்ரபிருதி விருத்தம்**
**யத்வத்வேசரம் பரிகீர்த்திதம்.**

—ஆகமப்பிரமாணம் "காரணம்"

இதன் பொருள்: 1. நாகரம் 2. திராவிடம் 3. வேஸரம் என மூவகைக் கோயிலுண்டு. 1. பூமி மட்டத்திலிருந்து தூபிவரை நான்கு மூலையுள்ள சதுர ஆலயத்திற்கு 'நாகரம்' என்று பெயர். 2. வேதி (மேடை)யி லிருந்து எண் கோண வடிவமாக அமைக்கப்படும் கோயில் **'திராவிடம்'** என்று கூறப்படுகிறது. கர்ண கூடத்திலிருந்து வட்டவடிவமாக அமையும் கோயில் **'வேஸரம்'** என்ற பெயர் பெறுகிறது.

என்று ஆகமம் கூறுகின்றது. இங்கே சதுரம், எண்கோணம், வட்டம் ஆகிய மூவகைத் தோற்றமுள்ள கோயில்கள் கூறப்பட்டுள்ளன. இத் தோற்றங்களைக் கோயிலின் அடித்தலத்தி லிருந்து விமான முடிவு வரையிற் காணவேண் டும். நம் தமிழ் நாட்டில் பூமி மட்டத்திலிருந்து தூபிவரை நான்கு மூலையுள்ள "நாகரம்" என்ற ஆலயத்தையும், விமானகர்ண கூடத் திற்குமேல் ஸ்தூபி முடிய வட்ட வடிவமுள்ள, 'வேஸ்ரம்' என்ற கோயிலையும் மிக எளிதாகக் காணலாம். மேடைக்குமேல் எண்கோண வடிவமாக விமான உச்சிவரை அமைந்துள்ள திராவிடம் என்ற பெயருள்ள கோயிலைக் காண் பது மிக அரிது.

இனித் திருக்கோயிலின் அமைப்பை அடிப் பகுதியிலிருந்து ஸ்தூபிவரைக் காண்போம். பூமி மட்டத்திலிருந்து தூபி முடிய ஆறு வர்க் கங்களோடு கூடியதாக அழகு பொருந்தத் திருக்கோயில் அமைக்கப் படவேண்டும் என்று ஆகமம் கூறுகின்றது.

"ஷட்வர்க்க ஸஹிதம் குர்யாத்
லக்ஷணேன சமந்விதம்"

—ஆகமப் பிரமாணம், காரணம்.

இந்த ஆறு வர்க்கம் பற்றிய விளக்கங்களை மேலே அறிவோம். 1. அதிஷ்டான வர்க்கம் 2. பாத வர்க்கம் 3.பிரஸ்தர வர்க்கம் 4. கெல வர்க்கம் 5. சிகர வர்க்கம் 6. ஸ்தூபி வர்க்கம் ஆகிய ஆறு பகுதிகளும் ஷட் வர்க்கம் என்று கூறப்படுகின்றது. மனித உடலின் முக்கிய உறுப்புக்களாக 1. கால்கள், 2. உடம்பு, 3. கழுத்து, 4. கால், 5. தலையுச்சி, இவைகள் இருப்பது போலவே கோயிலும் கீழிருந்து விமான நுனிவரை அதிஷ்டான வர்க்கம் என்ற உயரிய உறுதிமிகுந்த மேடையின்மீது தோற்று விக்கப் படுகிறது. 1. பாதவர்க்கம்—கால்கள் பகுதி, 2. பிரஸ்தர வர்க்கம்—உடம்பு, 3. கெல வர்க்கம்—கழுத்துப்பகுதி, 4. சிகர வர்க்கம்—முகம் அல்லது தலைப்பகுதி, 5. ஸ்தூபி வர்க்கம் —தலைநுனி அல்லது முடியைக் குறிக்கும்பகுதி. இவ் வைந்து பகுதிகளோடு கூடிய ஆலயம் அதிஷ்டான வர்க்கம் என்ற கர்ப்பகிருஹ அடித் தல மேடையின்மீது கம்பீரமாக எழும்பி நிற் கின்றது. இன்னும் திருக்கோயில் கட்டிடங் களில் இடம் பெற்றுள்ளன, உபாநம், ஜகதீ, குமுதம், கம்பம், க்ரீவம், அதோபட்டி, மஹா பட்டி, சிகரம், கேசாந்தம், ஆகிய சிற்ப உறுப்பு கள் ஒன்பதுவும் முறையே, 1. பாதுகை, 2. முழங்கால்கள், 3. அடிவயிறு, 4. கைகள் 5. கழுத்து, 6. உதடுகள், 7. நெற்றி முடிவு, 8. தலை, 9. தலை முடி ஆகிய அங்கங்களாகும் என்று ஆகமங்களிலேயே விளக்கம் கூறப்பட் டுள்ளது. தவிர கர்ணம்—காது, நாசிகா—மூக்குபோன்ற சொற்களும் கூறப்பட்டுள்ளன. "காயமே கோயிலாக" என்ற அப்பரடிகளின் திருவாக்கை மேற்கொண்டது போன்று திருக் கோயில் ஆகமங்களில் சரீரமாக உருவகப் படுத் தப்பட்டுள்ளதை உணர்வது அவசியம்.

"அடிமுதல் உபான மாதி
யாகிய படைக ளெல்லாம்
வடிவுறுந் தொழில்கள் முற்ற
மனத்திறல் வருத்து மான
முடிவுறு சிகரந் தானும்
முன்னிய முழத்திற் கொண்டு
நெடிதுநாள் கூடக் கோயில்
நிரம்பிட நினைவாற் செய்தார்."

என்ற பெரியபுராணப் பாடலில் 'அடிமுதல்' என்ற சொல் அதிஷ்டான வர்க்கத்தையும், 'உபானம் ஆதியாகிய படைகளெல்லாம்' என் பது பாதுகையோடு கூடிய பாத வர்க்கத்தி லிருந்து சிகர வர்க்கம் முடியவுள்ள நான்கு பகுதிகளையும் சேக்கிழாரடிகள் குறிப்பாக உணர்த்தி யுள்ளார்கள். சிகரத்திற்குமேல் ஸ்தூபி அமைக்கப் படுவதை "தூபியும் நட்டு மிக்க சுதையும் நல்வினையும் செய்து" என்று தொடங்கும் அடுத்த பாடலில் சேக்கிழார் பெரு மான் தெரிவித்தார்கள்.

மேற்குறிப்பிட்ட ஆறு கோயிற் பகுதிகளைத் தெளிவாக உணரும்போது 'அதிஷ்டான வர்க் கம்' என்பது கோயிலின் ஆதாரபீடமாகும். மூலவரை அல்லது ஈசுவர வடிவங்களைப் பிர திஷ்டை செய்வதற்குப் பூமியை ஆதாரமாகக் கொண்டு பலவித சிற்ப வேலைப்பாடுகளுடன் கூடிய உபபீடத்தோடு மிக உறுதியாக அமைந் துள்ள கர்ப்ப கிருஹ அடித்தல மேடைக்கு "அதிஷ்டான வர்க்கம்" என்று பெயர். 2. இதன் மேற்பகுதி பாதவர்க்கம். நமது

உடலைக் கால்கள் தாங்குவதுபோல் விமானத்தின் பளுவைத் தாங்கும் அடிப்பகுதி பாதவர்க்கம் எனப்படுகிறது. மூன்றுவதாகப் பிரஸ்தர வர்க்கம் விமான வேலைப்பாடுகள் தோன்றுவதற்கேற்ற அகன்ற இடமாகும். கெல (கழுத்து) வர்க்கத்திற்கும் பாத (கால்கள்) வர்க்கத்திற்கும் இடையில் அமைந்திருக்கிறது. பூமியை மறைக்கும் அகன்றுயர்ந்த கற்பலகைகளுக்குப் பிரஸ்தரம் என்று பெயர். கோயில் அமைப்பில் பாதவர்க்கத்திற்குமேல் பிரஸ்தர வர்க்கத்தை அமைத்துவிட்டால் "கர்ப்ப கிருஹம்" காட்சி தரும். இப் பகுதியில் விமானத்தின் முக்கிய சிற்பங்கள் இடம் பெறுகின்றன." பிரஸ்தர வர்க்கத்தின் மேலே நான்கு கோணங்களிலும் பூதகணங்கள் நால்வர் கை கூப்பிய படி அமர்ந்திருக்க வேண்டும், அல்லது கோணங்களில் ரிஷபங்களைப் படுத்தபடி அமைக்க வேண்டும்; விமானத்தின் நாற்புறத்திலும், கிழக்கு திசையில் குமாரனையும் (முருகக் கடவுள்), தெற்கே தக்ஷிணுமூர்த்தியையும், மேற்கே கேசவனையும், வடக்கே பிர்மாவையும் அமைக்க வேண்டும்;" என்பது காரணுகம விதி-இப் பிரஸ்தர வர்க்கத்தின்மீது அடுக்கடுக்காகக் கெலவர்க்கம், சிகர வர்க்கம், தூபி வர்க்கம் இம் மூன்றும் அமைத்துவிட்டால் விமானம் முழுமை பெற்றுவிடுகிறது. 'கெலம்' என்றாலும் 'க்ரீவம்' என்றாலும் கழுத்து என்று பொருள். விமானம் கவர்ச்சிகரமாக விளங்குவதற்கும், இதன்மேலுள்ள சிகரத்தைத் தாங்குவது போன்று குழைவோடும் கம்பீரத்தோடும் அமைக்கப்படும் விமான இடைப் பகுதிக்குக் கெல வர்க்கம் என்று பெயர். கோயிலும் விமானமும் உள்ளத்தைக் கவரும் எழில்மிகுந்த தோற்றத்தோடு விளங்குவதற்கு, விமானக் கழுத்துப் பகுதியில் செய்யப்படுகின்ற மிக நுணுக்கமான வேலைப்பாடுகளோடு கூடிய சிற்பங்களே காரணமாகின்றன. சிரசும் தலைமுடியும் மனிதனுக்குப் பிரதானமாக அமைந்திருப்பதுபோல, திருக்கோயிலின் உயர்வான பகுதிகள் விமான சிகரமும் ஸ்தூபியுமேயாகும். இவ்விரண்டும் க்ரீவ வர்க்கத்தின் மேலே உள்ளவை. இவைகளைப்பற்றி ஆகமங்களில் விரித்துரைக்கப் பட்டிருப்பினும், விமான சிகரமும், ஸ்தூபியும், கவர்ச்சிகரமாகக் காட்சிதரும் திருக்கோயில்கள் மிகுந்த தமிழ்நாட்டில் இதைப் பற்றி இங்கு விவரிக்க வேண்டியதில்லை. பற்பல விமானவகைகளைக் காரணுகமம் கூறுகின்றது. ஸ்ரீ காந்தம், கைலாசகாந்தம், கர்ண கூடம், சர்வதோமுகம், நந்தியாவர்த்தம், பஞ்சாலம், விஷ்ணுகாந்தம், ஆகிய விமானங்கள் பற்றிய லக்ஷணங்களை ஆகமங்கள் விரித்துரைக்கின்றன. இருப்பினும் இக் கட்டுரையில் திருக்கோயிலின் அமைப்பு நம் உடலைப்போன்று ஆகமத்தில் உருவகப்படுத்தப் பட்டுள்ளது என்பதை விதிப்படி தெரிவித்துள்ளேன்.

திருக்கோயில் உடலாகும். கோயிலின் உள்ளே இருக்கும் சிவலிங்கம் உயிராகும். உயிரும் உடலும் கூடிய முழுவடிவமாக உருவகப் படுத்தப்பட்டுள்ள திருக்கோயில்கள் எங்கும் நிறைந்த இறைவனின் அறிகுறியாகும். திருக்கோயிலைக் காணுந்தோறும் இறைவனைக் காண்பது போன்ற எண்ணம் நமக்கு எழ வேண்டும். ஜீவன் முக்தி சித்திக்கப்பெற்ற பெரிய ஞானிகளும் திருக்கோயில்களை வழிபட்டிருக்கிருர்கள். தாயுமானவர், பட்டினத்தடிகள் இராமலிங்க அடிகள், முதலிய பெரியோர்கள் திருக்கோயிலைத் தரிசித்து அகங்குழைந்து பாடியிருக்கிருர்கள்.

"ஆலயந்தானும் அரனெனத் தொழுமே."

என்ற சிவஞான போதச் சூத்திரத்தின் இறுதியில் அருளியுள்ளபடி, திருக்கோயில்களைத் திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளின் அறிகுறிகளாகக்கொண்டு மனம் மொழி மெய்களால் வழிபட்டு அதன்பயனுக அல்லல்கள் நீங்கி, அன்பும் அறிவும், ஆனந்தமும் சூழ்ந்த மேலான இன்ப வாழ்வு வாழ்வோமாக!



# சிற்பக்கலை வேண்டாச் சிற்றுயிர்

கோவை திரு. சி. எம். இராமச்சந்திரன் செட்டியார், B.A.,B.L.

குடியிருப்பு வளைவில் ஒரு வாழை மரம் நிரம்ப அடிக்கிளைகள் விட்டுக் கொண்டு செழித்திருந்தது. மேலே பெரிய வாழை குலைதள்ளியிருந்தது. குலை பழுக்கும் தருவாயில் வெட்டி, வீட்டார் எடுத்துக் கொண்டார்கள். பிறகு வீட்டில் சமைப்பதற்காக அடித்தண்டை வெட்டினார்கள். அடித்தண்டி லிருந்து ஒரு வெள்ளை வெளேர் என்ற சிறு தவளை வெளியே குதித்தது. அது வெளிச்சத்தைக் கண்டு சகிக்காது மற்றொரு அடிச் செடிக்குள் புகுந்து மறைந்தது. வாழையில் வேரில் அது பதுங்கிக் கொண்டிருந்தது. முழைஈரமாகவும் காற்றோட்டம் இல்லாததும் ஆன சிறு குகை போல இருந்தது. வாழை அடித்தண்டைப் போல மிக வெண்மையாக அம் முழையும் தவளையும் இருந்தன. காற்றோட்டமும் அசைவதற்கு இடமும் இல்லாத அந்தக் குறுகிய இருட்டறையில் அந்த வெள்ளைத் தவளை எப்படி பிறைத்ததோ, பெருகியதோ யார் அறிவார் ?

இச்செய்தியைக் கண்டபோது

**" கருப்பையுள் முட்டைக்கும் கல்லினுள் தேரைக்கும்**
**விருப்புற் றமுதளிக்கும் மெய்யன்-உருப்பெற்றால்,**
**ஊட்டி வளர்க்கானோ ஓகெடுவாய் அன்னாய் கேள்,**
**வாட்டம் உனக்கேன் மகிழ்"**

என்ற செய்யுள் நினைவிற்கு வந்தது. ஒரு கரும் பாறையினுள்ளே ஒரு சிறு முழைக் குள்ளே ஒரு தேரை வளருகிறது. சிறிது நீரும் மணலும் சிறிது காற்றும் கொண்ட அம் முழைக் குள்ளே அது வசிக்கிறது. வெளி உலகிற்கு வந்து போக ஒரு சிறு வழியும் இல்லை. இருட்டில் வசிக்கும் அதற்கு இரை யார் தருகிறார்கள் ? இறைவனுடைய அற்புதத் திருவருளே அதற்கு ஆதாரம் என்க.

அந்த அற்புத வாழ்வை அடைந்திருக்கும் தேரை அடைபட்டிருக்கும் பாறை, மற்ற இயல்புகளில் பொருத்தமாக இருந்தாலும் சிற்பத்திற்கு அது வேண்டாத தாகும். தேரை உள்ள ஒரு பாறையைச் சிற்பிகள் குற்றமுள்ளது என்பார்கள். ஒரு சிற்பி தான் ஒரு கோயிற் பணிக்குத் தெரிந்தெடுக்கும் பாறையை நன்கு ஆராய்ந்து அதனுள் குற்றங்கள் உள்ளனவா என்று சோதிப்பான். பிளவு, முழை, தாரை, தேரை இல்லாத முற்றும் கடினமான கல்லையே தெரிந்தெடுப்பான். அதில் செய்யும் சிற்பமே கோயிலுக்குப் பொருத்தமானது. இந்தக் குற்றங்களைக் கண்டு பிடிக்க வல்லமை இல்லாவிடில் அச்சிற்பி தகுந்தவன் ஆகமாட்டான்.

மூன்று நூற்றாண்டுகளின் முன் நாயக்க மன்னர்கள் மேல்கொங்கு நாட்டை ஆண்டபோது, சுந்தர மூர்த்தி சுவாமிகளால் தேவாரத்து அருள் வாக்கால் பாராட்டப் பெற்ற புனிதத்தலம் ஆன திருப் பேரூர்த் திருவான் பட்டி

உடையார் கோயிலில் திருப்பணி செய்தார்கள். காஞ்சி நதியின் தென்கரையில் வீற்றிருந்த அந்தப் பண்டைக் கோயிலில் கனகசபை என்ற கூத்தாடும் பெருமானின் சன்னிதியை ஒரு அரிய அழகிய சிற்றம் பலமாகப் புதுப்பித்தார்கள். பெருமான் திரு மூர்த்தங்களைப் பெரிய வடிவில் கருங்கல்லில் அமைத்து, அரிய வேலைப் பாடுகளைக் கொண்ட தூண்களும் அமைத்து மிகச் சிறந்த மண்டபம் கட்டிச் சிற்பக்கலையைப் பெருமானுக்குக் காணிக்கையாகத் தந்தார்கள். அந்தச் சபை இன்றைக்கும் பொலிவுடன் விளங்குகிறது.

அந்தச் சிறந்த திருப்பணி திருமலை நாயக்கர் உறவினரும் அரசப் பிரதிநிதியுமான அழகாத்திரி நாயக்கர் மேற்பார்வையில் மிகச் சிறந்த முறையில் நடத்தப் பட்டது. சிற்பங்கள் மிகச்சிறந்த வகையில் அமைக்கப் படவேண்டும் என்பது அரசனுடைய விருப்பம். அதற்காகக் கை தேர்ந்த நிபுணர்களை அமர்த்தினார்கள். யாதொரு குற்றமும் நிகழாதபடி சிற்பிகளுக்கு மேலாளராக இராச சிற்பியே நியமிக்கப்பட்டான். வெகு சிரத்தையோடு வேலையும் நடந்தது. மண்டபம் முடிவடைந்ததும் இராச புரோகிதரைக் கொண்டு குடமுழக்கு செய்வதற்காக நல்ல நாளும் குறிக்கப்பட்டது. தமிழ் நாடெங்கும் இந்தப் பெருந் திருவிழா விளம்பரப் படுத்தப் பட்டது. அரசனும் நேரே இருந்து விழாவை நடத்த வந்திருந்தான். நூறுயிரக் கணக்கான மக்கள் திவ்விய காட்சியைக் காண வந்தார்கள். சிற்றூராயிருந்த பேரூர் மிகப் பெரிய பேரூராக விளங்கிற்று. காஞ்சிமா நதியின் இருகரைகளிலும் உள்ள பெருந் தென்னந் தோப்புகளில் கணக்கற்ற மக்கள் கூடி இருந்தார்கள். மேலும் மேலும் பொதுமக்கள் வந்த வண்ணமாகவே இருந்தார்கள்.

குடமுழுக்குக்கு முந்திய நாள் பேரூர் நோக்கிப் பெரும் சனத்திரள் சென்று கொண்டிருந்தது. அத்திரளில் ஓர் அழகிய வாலிபன் சென்று கொண்டிருந்தான். அவன் முகம் ஒரு சிறந்த அறிவாளி என்று தோற்றிற்று. குடமுழுக்கு விழா வெகு கம்பீரமாக நடைபெறுகிறது என்று கேட்டு அதனைக்காண அவன் சென்று கொண்டிருந்தான். கோயிலினுள் புகுந்ததும், கனகசபையின் தூண்களைக்கண்டு அவற்றின் அற்புத வேலையை ஆராய்ந்து கொண்டு சென்றான். முதலில் பத்துப் பெருந்தூண்களைக் கண்டு வியந்து கொண்டு பெருமான் எழுந்தருளியிருந்த பீடமண்டபத்தின் இருபக்கங்களிலும் அமைந்திருந்த குதிரை வீரர்களின் உருவங்களைக் கண்டான். பெருமானுக்கு இடது பக்கம் நிற்கும் குதிரையைக் கண்டவுடன் கூர்ந்து நோக்கினான். மனம் கலங்கியது. 'இதனை எந்த சிற்பி இயற்றினன்' என்று கேட்டான். இராஜ சிற்பிதான் இயற்றியது என்று தெரிந்தது. பக்கத்தில் நின்றவர்களிடம் "இதனைச் செதுக்கிய சிற்பி எவராயிருந்த போதிலும் கல்லில் உள்ள குற்றத்தைத் தெரிந்து கொள்ளாத சிற்பியாக இருக்கிறார். இத்தனை மகத்தான வேலையில் இப்படிப் பட்ட குற்றம் செய்யலாமா?" என்றான். பக்கத்தில் இருந்த அதிகாரிகள் வெகுண்டு போனார்கள். "நாளைக்குக் குடமுழுக்கு, இராஜ சிற்பி செய்த வேலையில் குற்றம் கண்டுபிடிக்கும் இந்தத் துடுக்கு வாலிபன் யார்" என்று வியந்தார்கள். செய்தி உடனே அரசனுக்கும் சிற்பிக்கும் எட்டி விட்டது. "அந்தத் துடுக்கு வாலிபனைக் கொண்டு வாருங்கள்" என்று அரசன் கட்டளையிட்டான். வாலிபன் அரசன்

முன் வெகு கம்பீரமாக நின்றான். அரசன் கேட்டதற்குக் "குற்றம் குற்றமே. நிரூபிக்கிறேன்" என்றான் வாலிபன். இராஜ சிற்பியோ "நீ நிரூபித்தால் இந்தக் கையை வெட்டிக் கொள்கிறேன்" என்றான். உடனே சந்தனச் சாந்து தரப்பட்டது. அந்தக் கற் குதிரையின் மீது நிரம்பப் பூசப்பட்டது. சிறிது நேரத்தில் சந்தனம் உலர்ந்து விட்டது. ஆனால் ஒரு குறிப்பிட்ட இடத்தில் மட்டும் ஈரம் காயவில்லை. "இந்த இடத்தில் ஒரு தேரை இருக்கிறது. தேரை உள்ள கல்லோ சிற்பத்திற்கு உதவாது அல்லவா? வெட்டிப் பாருங்கள்" என்றான் வாலிபன். அந்த இடம் உளியால் தோண்டப் பட்டது. உள்ளே ஒரு சிறு முழையும் தண்ணீரும், மணல் சிறிதும் அதிலே ஒரு சிறு தேரையும் இருந்தன. இராஜ சிற்பி தோல்வி யடைந்தான். தன் கையை உடனே அரிந்து கொண்டான். வாலிபன் யார் என்று விசாரித்ததில் சில ஆண்டுகளின் முன் சிற்பக்கலை படிக்கச் சென்ற தன் மகனே என்று சிற்பி அறிந்தான். நோயையும் கவனியாது தன் மகன் மீது அன்புற அணைத்துக் கொண்டான் பெரிய சிற்பி.

உடைந்த குதிரை உருவமும் அதனை ஒட்டிக் கொடுத்திருக்கும் ஆதரவுக் கற்களும் இன்றைக்கும் பேரூர்க் கோயிலில் நடராசப் பெருமான் கனக சபையில் காணலாம். இதைப்பற்றி வழங்கும் கர்ண பரம்பரைக் கதைதான் மேலே எழுதப்பட்டது. ஏற்கனவே மண்டபத்தில் இணைக்கப் பட்டிருந்ததினால் குற்ற முள்ள கல்தூண் முழுவதும் நீக்கி விட்டு வேறு ஒரு குதிரை வீரனுடைய உருவம் வைக்க முடியவில்லை. இதனால் நமக்குப் புலப்படும் செய்தி என்ன வெனில், தேரை இருக்கும் படியான பாறை சிற்பத்திற்கு உதவாது என்பதாம்.

பேரூர்க் கோயிலில் மட்டும் அல்ல. தென்னிந்தியக் கோயில்களில் வேறு சிலவற்றிலும் இப்படிப்பட்ட கதைகள் வழங்குகின்றன. இடிந்த சின்னங்களும் காட்டப்படுகின்றன. மதுரையில் மீனாட்சியம்மன்கோயில் கோபுரத்திற்குமுன்னால் பாதிவேலையோடு நின்றிருக்கும் கோபுர அஸ்திவாரக் கல் ஒன்று பிளக்கப் பட்டிருக்கிறது. அது பூர்த்தி செய்யப்படவில்லை. அங்கேயும் கல்லில் ஒரு தேரை இருந்ததாகச் சொல்லுகிறார்கள்.

இனி மைசூர்ப் பிராந்தியத்தில் ஹாசன என்ற வட்டத்தில் ஹொய்சளர் அரச வம்சம் தழைத்திருந்த தலைநகர் ஆகிய பேளூரில் **சென்ன கேசவப் பெருமாள்** கோயில் சிற்பப் பெருமையில் மிகச் சிறந்து விளங்குகிறது. அக்கோயிலில் மூலத்தான மூர்த்திக்கு "**கப்பே சென்னிகராய**" என்று பெயர். அதன் பொருள் என்ன வெனில் **தவளைச் சென்ன கேசவர்** என்பதாம். அத்திருவுருவத்தைப் பற்றியும் பேரூர்க் கதையைப்போல ஒன்று வழங்குகிறது. கன்னட நாட்டில் ஹொய்சளர் காலத்தில் **தெக்கணாச் சாரியர்** என்ற ஒரு சிறந்த சிற்பி இருந்தார். அவர் அனேக கோயில் சிற்பங்களை வெகு சிறப்புடன் முடித்தவர். சென்ன கேசவப் பெருமாள் திருவுருவத்தை மிக அழகுடன் செதுக்க முயன்று பூர்த்தியும் செய்துவிட்டார். பிறகு ஒரு வாலிபச் சிற்பி அவ்வுருவத்தைக் கண்டதும் அதில் ஒரு பிசகு இருப்பதாகக் கூறினான். முதிய சிற்பியோ அப்பிசகை நிரூபித்தால் தன்கையைத் தறித்துக் கொள்வதாகச் சபதம் செய்தார். இளஞ் சிற்பி சந்தனச் சாந்தை அம்மூர்த்தியின் மீது தடவிவிட, சந்தனம் உலர்ந்ததும் ஒரு இடத்தில் மட்டும் ஈரமாக இருக்கக் கண்டு அதனுள் அந்த இடத்தில் ஒரு தேரை இருப்பதாகக் கூறினன்.

# "பெருநம்பி"

வித்துவான் திரு. சி. அருணைவடிவேலு முதலியார், தருமபுரம்.

ஆடவருள் சிறந்தவரை 'நம்பி' எனக் கூறுதல் தமிழ் மொழியின்கண் உள்ள ஒரு மரபு. மலை நாட்டில் இன்று 'நம்பியார்' என வழங்கும் வழக்கும் இத் தமிழ் மரபின் வழி வந்ததே யாகும்.

இவ் வழக்குப் பற்றிக் கூறுமிடத்து, 'நம்பி' என்பது மட்டுமன்றி, 'பெரு நம்பி' என்று ஒருவர் குறிப்பிடப் பெறுவாராயின், அவர் எத் தகையராய் இருத்தல் வேண்டும்? மேலும், அங்ஙனம் குறிப்பிட்டவர் எளிய ஒருவர் அல்லர்; அவரும் ஒரு நம்பி; ஆளுடைய நம்பி; நம்பி யாரூரர்; இறைவனுக்கே தோழராகி, 'தம்பிரான் தோழர்' என்னும் பெயரைப் பெற்றவர்; அவர் தாம் சமயாசாரியர் நால்வருள் ஒருவராகிய சுந்தரமூர்த்தி நாயனார்.

இவர் யாரை, எங்கு, 'பெருநம்பி' எனக் குறித்துள்ளார்? 'குலச்சிறையார்' என்பாரையே இவர், செயற்கருஞ் செயல்களைச் செய்த பெரியார்களாகிய திருத்தொண்டர்களை எல்லாம் தொகுத்துக் கூறும் தொகையிடத்தே 'பெருநம்பி' எனக் குறித்தருளினார். சிவனடியார் திருப்பெயர்களை எல்லாம் எடுத்தோதி, 'அவருக்கு யான் அடியேன்' எனத் தனியே கூறி வருமிடத்தில், குலச்சிறையாரை, 'பெரு நம்பி' எனக் குறித்து, அவர்க்கு நேரே அடியேன் என்னாது அவர்தம் அடியார்க்கு அடியேன் என்று அருளினார். அத்தொடர் "**பெரு நம்பி குலச் சிறைதன் அடியார்க்கும் அடியேன்**" என்பது.

அருளாசிரியராகிய ஆளுடைய நம்பிகள் குலச்சிறையாரை இவ்வாறு 'பெருநம்பி' என எடுத்தோதினாராயின், நாம் அதனைப் பொது வகையில் நோக்கி யொழியாது, சிறப்பாக ஊன்றி நினைத்தல் வேண்டும். அவ்வாறு நினைத்தே சேக்கிழார், "வன்றொண்டர்தாம்—ஒப்பரும் பெருநம்பி என்றோதிய செப்பருஞ்சீர்க் குலச்சிறையார்" எனக் குறித்துப் போந்தார். இதனுள் சேக்கிழார் 'பெருநம்பி' என்பதற்கு, 'பிறரொருவருந் தமக்கு நிகரில்லாத பெருமை உடையவர்' எனப் பொருள் விரித்தலைக் காண்கின்றோம்.

பிறர் ஒருவரும் தமக்கு நிகரில்லாத வகையில் குலச்சிறையார் பெற்றிருந்த பெருமை யாது?

---

*சிற்பக்கலை வேண்டாச் சிற்றுயிர்......*

உடைத்துப் பார்த்ததில் அதில் ஒரு தேரை இருந்ததாம். முதிய சிற்பி உடனே தன் கையைத் தறித்துக் கொண்டாராம். பிறகு விசாரித்ததில் அந்த இளைய சிற்பி வெகு காலத்திற்கு முன்னர்ச் சிற்பக்கலை கற்பதற்காகப் பிற நாடு சென்ற தன் சொந்த மகன் என்றறிந்த முதிய சிற்பி மிக மகிழ்ச்சியடைந்தாராம். பின்னர் அம் முதிய சிற்பி 'கைதல' என்ற ஊர் சென்று அங்கே எழுந்தருளியிருந்த பெருமானை வழிபட அந்தக்கை மீண்டும் முளைத்ததாம். இந்தக் கதை மைசூர்ப் பிராந்தியத்தில் இன்னும் வழங்குகிறது. கோயில் வரலாறுகளில் குறிக்கப்பட்டும் இருக்கிறது.

இப்படிப்பட்ட வரலாறுகளில் அறியக் கிடக்கும் ஒரு கருத்து என்னவெனில், தேரை வசித்துவரும் முழைகள் கொண்ட பாறைகள் சிற்ப வேலைக்கு உதவாது என்பதே. நன்கு கை தேர்ந்த சிற்பி கல்லில் உள்ள குற்றங் குறைகளை நன்கு ஆராய்ந்து அவைகள் இல்லாத தூய்மையான கற்களை மட்டும் சிற்பம் செய்வதற்குப் பயன் படுத்தவேண்டும். இது சிற்ப நூலில் கண்ட ஒரு விதி ஆகும். ❋

குலச்சிறையார் பாண்டி நாட்டில் உள்ள 'மணமேற்குடி' என்னும் ஊரினர்; 'அவ்வூரினர்' என்பது மட்டுமன்று; அவ்வூரையே தம் முடையதாக உடையவர். இது, ''மணமேற் குடி மன் குலச்சிறையே'' என நம்பியாண்டார் நம்பிகள் குறித்த குறிப்பினாலும், அக்குறிப்பினை, 'அப்பதிக்கு முதல்வர்' எனச் சேக்கிழார் இனிது விளக்கிய விளக்கத்தாலும் பெறப்படுகின்றது. இதுபற்றியே ஆறுமுக நாவலரவர்களும் தமது சூசனத்தில் இவரைப் 'பெருஞ் செல்வர்' எனக் குறித்தார்.

இவ்வாறு ஓர் ஊரையே தம்முடையதாக உடைய பெருஞ் செல்வராய் இருந்தமை பற்றித்தான் தம்பிரான் தோழர் இவரை, ''பெரு நம்பி'' என்றருளினரோ எனின், அன்று; ஏனெனின், பாண்டி நாட்டில்—மற்றும் சோழ நாடு முதலிய நாடுகளில் இவரைப் போல ஓர் ஊரையேயன்றிப் பல ஊர்களைத் தங்களுடையனவாக உடைய பெருஞ் செல்வர் எத்துணையோ பேர் உளராகலின், இவரைச் செல்வம் பற்றி, 'பிறரொருவரும் தமக்கு நிகரில்லாதவர்' எனக் கூறுதல் பொருந்தாதன்றே!

இனி, குலச்சிறையார் பாண்டியன் நெடு மாறனுக்கு முதல் அமைச்சராய், அரசியல் துறையில், பிரித்தலும், பேணிக்கொளலும், பிரிந்தார்ப் பொருத்தலும் முதலிய அமைச்சர் அறத்திற் சிறந்து நின்று, அவனால் நன்கு மதிக்கப் பெற்று விளங்கியவர். அதனால் மண மேற்குடி மட்டுமன்று; பாண்டிய நாடு முழுதுமே இவருடையதாய் இருந்தது என்று கூறலாம். இதனைச் சேக்கிழார் ''ஈறில் சீர்த்—தென்னவன் நெடுமாறற்குச் சீர்திகழ் மன்னு மந்திரிகட்கு மேலாகியார் — ஒன்னலர்ச்செற் றுறுதிக்கண் நின்றுளார்'' என்று அருளினார்.

எனவே, இதுபற்றித்தான் இவர் வன் றொண்டரால் 'பெருநம்பி' எனச் சிறப்பிக்கப் பெற்றாரோ எனின், அதுவும் அன்று. என்னை யெனின், இவர்போல் முடியுடை வேந்தர்க்கு உற்ற அமைச்சரும் பலர் உளராகலான். அன்றியும்,

> '' மந்த யானை யேறி மன்னர்
> சூழவரு வீர்காள்
> செத்த போதில் ஆரு மில்லை
> சிந்தையுள் வைம்மின்கள் ''

எனப் பிறர்க்கும் அறிவுறுத்தும் ஆரூரர் செல்வச் சிறப்பும், ஆட்சிச் சிறப்பும் பற்றி ஒருவரைச் சிவனடியாருள் வைத்து, 'பெருநம்பி' எனப் புகழ்ந்து கூறுவரோ? கூறுர் அன்றே!

இவை எல்லாம் அல்லவாயின், குலச்சிறையாரை வன்றொண்டர் 'பெருநம்பி' என அருளியது, மற்று எது பற்றியோ எனின், அதுவே இங்கு ஓர்ந்துணரற்பாலது.

செல்வம், ஆட்சித் தலைமை முதலியவை தமக்கு வேறாய் உள்ள பொருள்கள் என்பதும், அவை தம்மோடு சிறிது காலம் தொடர்பு பட்டு நிற்பது சில காரணங்களால் என்பதும், அக் காரணம் நீங்கிய வழி, தம்மோடு அவை ஏதும் தொடர்பின்றித் தொலைவிலே நீங்கியொழியும் என்பதும் கண்கூடாய் அறியப்பட்ட உண்மையாய் இருப்பவும், அவ்வுண்மைகளை அறவே மறந்து, செல்வம் முதலியவற்றையேதாம் என மயங்கி, இரக்கம், நடுவுநிலைமை, பணிவு முதலியவைகள் இன்றிச் செருக்குற்றுத் தீநெறிக் கண் சென்று கெடுவர் சிறியோர்; அவ்வாறு காது செல்வம் முதலியனவே யன்றி, உடம்பு, இளமை முதலியனவும் தமக்கு வேறுதலையும், அவற்றது நிலையாமையையும் உணர்ந்து நிலையின் திரியாது அடங்கி நன்னெறிக்கண் நின்று நலம் பெறுவார் பெரியோர்.

உலகப் பொருள்கள் தமக்கு வேறுதலையும், அவற்றது நிலையாமையையும் உணர்ந்து அவற் றால் மயங்காதிருத்தற்கு அவைகளை அவை காணப்பட்டவாறே கண்டொழியாது, அவற்றின் காரணத்தை உணரும் உணர்வு வேண்டும். அக்காரணத்தை 'ஊழ்' என்னும் அளவில் அறநூல்கள் உணர்த்தும். 'கணியன் பூங் குன்றனார்' என்னும் பழந்தமிழ்ப் புலவர் ஒருவர், 'வாழ்தல்—இனிதென மகிழ்ந்தன்றும் இலமே; முனிவின்-இன்னு தென்றலும் இலமே ...பெரியோரை வியத்தலும் இலமே—சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே' (புறம்-192) என்று கூறினார். இதில் 'பெரியோர்' என்றது வாழ்விற் பெரியோரையும், 'சிறியோர்' என்றது வாழ்விற் சிறியோரையுமே யாகும். இப்புறப் பாட்டுப் பகுதியால் அப்புலவர் வாழ்வால் மயங்காமலும், தாழ்வால் துன்பம் உறுமலும் இருந்தமை தெளிவாக விளங்கும்.

இத்தகைய மன நிலை தமக்கு எவ்வாறு உண்டாயிற்று என்பதையும் அப்புலவர் அப்

பாட்டிலேயே கூறியுள்ளார். ''நீர்வழிப்படூஉம் புணைபோல் ஆருயிர்—முறைவழிப் படூஉம் என்பது திறவோர்—காட்சியின் தெளிந்தனம் ஆகலின்'' என்பது அப்பகுதி. இதனுள், 'முறை' எனப்பட்டது 'ஊழ்'. 'காட்சி' எனப்பட்டது நூல். இதனால், உலகம் தானே தன் இயல்பில் வேண்டியவாறு இயங்கி வரவில்லை; 'ஊழ்' என்ற ஓர் ஆற்றலுக்கு உட்பட்டு அதன் வழியே இயங்கி வருகின்றது என்பது தெளிவாகும். இவ்வுண்மையைத் தெளிந்த தெளிவினால்தான், மேற்கூறிய மனநிலை அவர்க்கு உளதாயிற்று.

இன்னும் அவர் அப்பாடலில், ''தீதும் நன்றும் பிறர்தர வாரா—நோதலும் தணிதலும் அவற்றோரன்ன—சாதலும்புதுவதன்றே'' எனக் கூறினார். இவ்வளவு பேருணர்வையும் பெற்றதனால்தான் அவருக்கு 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என, அவர் அப்பாடலில் முதற்கண் கூறிய பரந்த நோக்கு உளதாயிற்று.

''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' என்ற மனநிலை மக்களுக்கு வேண்டும், வேண்டும் என்று இப்பொழுது பலரும் பேசியும் எழுதியும் வருகின்றனர். ஆனால் அம்மனநிலை உண்டாவதற்கு உரிய காரணத்தை மக்களுக்கு விளக்குவதிலோ; அதனை மக்களிடையே வளர்ப்பதிலோ அவர்கள் கருத்தைச் செலுத்துவதாகத் தெரியவில்லை. இது, ஒரு மரத்தை வளர்த்து அதன் பயனைப் பெறுவதற்கு அதன் வேரில் நீரை நிரம்பப் பாய்ச்சாமல், கிளைகளிலும் இலைகளிலும் சிறிது தண்ணீரைத் தெளிப்பது போலவும், உழுகிற நாளில் திரிந்துவிட்டு அறுவடை நாளில் அரிவாளை எடுத்துக் கொண்டு வயலில் அறுவடைக்குப் போவது போலவும் உள்ளது. அது நிற்க.

'உலகத்தின் இயற்கைக்கு ஊழே முதலாய் உள்ளது' எனக் கூறும் அறநூல்கள், ஒன்றையும் கண் விழித்து நோக்காது, 'கண்டதே காட்சி; கொண்டதே கோலம்' எனக் கொண்டு இருளில் மூழ்கி யிருப்பவரைச் சிறிது கண் திறக்கச் செய்து, உண்மையை உணரும் வழியில் அழைத்துச் சென்று உண்மையின் வாயிற்படியில் நிறுத்துவனவேயன்றி, உண்மையை முற்றிலும் அடைத்து விடுவன அல்ல. மிகவும் தாழ்ந்த நிலையில் இருப்பவர்களுக்கு முதலில் அவ்வளவுதான் அந்நூல்கள் கூற இயலும். ஆனால், அற நூல்களின் வழியே சென்று அதன் எல்லையை அடைந்தவர்களுக்கு முழு உண்மையைப் பெறுவிப்பன கடவுட் கொள்கையுடைய சமய நூல்களேயாம்.

இந்நூல்கள், 'உலகத்தை நடத்தும் ஊழ் என்பது இறைவன் வகுத்த ஓர் ஒழுங்கு முறையே' என்பதையும், அதனால், 'அம்முறையின்படி அடங்கி ஒழுகுபவர்க்கு நன்மையையும், மாறி நடப்பவர்க்கு ஒறுப்பினையும் அவ்விறைவனே தருவன்' என்பதையும் அறிவுறுத்தும். இக் குறிப்பினைத் திருவள்ளுவர், 'ஊழ்' என்னும் அதிகாரத்துள், 'வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி—தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது' எனச் சிறிது வெளிப்படுத்திப் போந்தமை யறிக. இதனால், 'நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்—முறை வழிப் படூஉம்' என்றது, உண்மையில் இறைவன் வழிப்பட்டு நடத்தலையே கூறியதாகின்றது.

இவ்வுண்மையை உணராது 'ஊழ்' ஒன்றையுமே உணர்வார், செல்வம் முதலியவற்றின் நிலையாமையை உணர்ந்து அவற்றால் மயங்காதொழியினும், அங்ஙனம் மயங்காது நின்றே ஏனையோரோ டொப்பத் தாமும் அச் செல்வம் முதலிய வற்றால் வரும் இன்ப துன்பங்களை நுகர்வதல்லது அதற்கு மேற்பட்ட பயனுக ஒன்றையும் அவர் பெறுமாறில்லை. அங்ஙனமாகவே ஏனையோர் போலச் செல்வத்தை ஈட்டலும் காத்தலும் ஆகிய முயற்சியன்றிப் பிறிதொரு முயற்சியும் அவர்க்குத் தோன்றுமாறும் இல்லை. ஏனையோர் முயற்சியைப் போலவே தாமும் முயலும் வழி 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்னும் மனநிலையால் வரும் பெரும் பயன் ஒன்றும் இல்லாதொழிதலோடு, அந் நிலையில் திரியாது நிற்றலும் அரிதாய் விடும். அதனால், ஊழின் உண்மையுணர்ந்து செல்வம் முதலியவற்றான் மயங்கும் மயக்கத்தின் நீங்கினோர் அவ்வளவின் நில்லாது, ஊழ் உணர்ச்சிக்கு மேலான இறையுணர்வைப் பெறுதல் வேண்டும்.

செல்வச் செருக்கும், செல்வத்தின் அவாவும் இறையுணர்விற்குத் தடைகளே யாயினும், அத்தடைகளின் நீங்கினோரும் இறையுணர்வைப் பெறுதல் அரிது. அதற்கு முன்னைத் தவம் வேண்டும். இதனை, 'வாழ்வெனும் மையல் விட்டு வறுமையாம் சிறுமை தப்பித்—

தாழ்வெனும் தன்மையோடும் சைவமாம் சமயம் சாரும்—ஊழ் பெறல் அரிது' என்றது சிவஞான சித்தி.

'இறைவன் ஒருவனே எல்லா முதன்மையும் உடையவன்; அதனால் யாவும் அவன் வழிப்பட்டே நடப்பன; அவன் யாதொன்றாலும் குறைவில்லாத நிறைவையுடையவன்; அதனால், தன் பொருட்டு ஒன்றையும் வேண்டுபவனல்லன்; கைம்மாறு கருதாத கருணையே வடிவினன்; அதனால், உயிர்கள் பொருட்டே எல்லாவற்றையும் செய்பவன்; அவன் உயிர்களை அவற்றது துன்பத்தினின்றும் நீக்கித் தானாகச் செய்து தன் இன்பத்தை வழங்குதலே அவனது குறிக்கோள்' என்று இவ்வாறு உணரும் உணர்வே இறையுணர்வாகும்.

இவ்விறையுணர்வைப் பெற்றோர் அவனது பேரின்பத்தைத் தலைப்பட்டு மகிழ்ந்திருப்பாராகலான், அவருக்கு இங்குள்ள செல்வத்தாலும் ஆட்சி முதலியவற்றாலும் ஆகக்கடவது ஒன்றும் இல்லை. அதனால் இறையுணர்வுடையவரே உண்மையில் வாழ்வெனும் மையலின், முற்றும் நீங்கினவராவர்.

ஒருவரது இறையுணர்வின் அளவு, பிறருக்குக் காட்சிப் படுவது அன்று; ஆயினும் அதனைக் கருதலளவை என்னும் அனுமான அளவையால் உய்த்துணர்தல் கூடும். ஒருவருக்குப் பிறர்பால் உள்ள அன்பின் அளவை அவ்வன்பு செய்யப்பட்டாருக்குச் சுற்றமாயினாரைக் காணும் வழி அவர் மாட்டு நிகழும் அவரது அன்பின் அளவுபற்றியறியலாகும். அவ்வாறே இறைவனிடத்து உள்ள அன்பின் அளவு அவனுக்கு அடியவராய் உள்ளவரைக் காணுமிடத்து அவரிடத்து நிகழும் அன்பின் அளவு பற்றியறியப்படும். ஒருவர் தம் அன்பிற்குரியாரை நேரிற் காணும் பொழுது இன்சொல் கூறி வரவேற்று, இனியன செய்து விடுத்து, அவரது சுற்றத்தாரைக் கண்ட வழி இகழ்ந்தொழிவராயின், அவர்தம் அன்பிற்குரியாரிடத்துச் செய்யும் அன்பு உண்மையன்பு ஆகாது என்பதை அனைவரும் உடன்படுவர். அவ்வாறே இறைவனை மன மொழி மெய்களான் வழிபட்டு அன்பு செய்வோர், அவன் அடியாரைக் கண்டவழி இகழ்ந்தாராயின், அவரது இறையன்பு போலியேயாகும் என்பது உறுதி.

இதுபற்றியே, 'ஈனுக்கன் பில்லார் அடியவர்க்கன் பில்லார்' என்றது, சிவஞான சித்தி.

இறைவனை உணரும் உணர்வினால் அவனிடத்து அன்பு மீதூரப் பெற்றார்க்கு அவன் அடியாரைக் கண்ட காலத்து அன்பு கரையின்றிப் பெருகும். அவ்வன்பின் முன் செல்வச் சிறப்பு, ஆட்சித் தலைமை முதலியவற்றால் தம்மை மதித்தொழுகும் நிலையெல்லாம் நீங்க, அவ்வடியவரது அடிமலர்களில் முடிதோய நிலத்தில் வீழ்ந்து வணங்கி அவருக்குக் குற்றேவல் புரியும் நிலை உளதாகும். இந்நிலையின் உச்சியிலே, ஒப்புயர்வற்று நின்றவர் குலச்சிறை நாயனார்.

இவர் சிவனடியாரைக் கண்டபோது தமது செல்வச் சிறப்பினையும், பாண்டிய மன்னனுக்கு அமைச்சருட் சிறந்த அமைச்சராய் விளங்கும் பெருமையினையும் அடியோடு மறந்து எதிர் சென்று அவரது திருவடிகளில் வீழ்ந்து, எழுந்து கைகூப்பி நின்று, இன்சொற்பல சொல்லி, வேண்டுவன யாவும் செய்து விடுப்பார்.

சிவனுக்கு அடியவராயினார், அக்காலத்து உறுதி பெற்று நிலவிய வருணாச்சிரம வேறுபாடுகளில் பிறப்பினாலும், சிறப்பினாலும் உயர்ந்தவராயினும் தாழ்ந்தவராயினும், அவற்றை இவர் சிறிதும் உளங் கொள்ளாது அனைவரையும் ஒரு படித்தாகவே வரவேற்று வேண்டுவன செய்வார். உணவு வேண்டி வரும் அடியவர் பலராய் வரினும் ஒருவராய் வரினும் இனிய திருவமுது அமைத்து, உடன் இருந்து உண்டு, அவரை ஊட்டி மகிழ்விப்பார். திருநீறும் கண்டிகையும் முதலாகிய சிவ வேடத்துடன் திருவைந்தெழுத்தை அன்போடு ஓதுவார் யாவராயினும் அவரது திருவடியையே தமக்குத் துணையாகக் கொண்டு போற்றி வரும் பண்பினை உடையவர் குலச்சிறையார்.

பெருஞ் செல்வரும், பேரமைச்சருமாய் விளங்கிய ஒருவர்க்கு, 'ஆரம் கண்டிகை; ஆடையும் கந்தையே' என்ற எளிய நிலையில் உள்ள அடியார்களிடத்து இவ்வாறு ஒழுகும் நிலை வாய்த்தல் என்பது அரிதினும், அரிதேயாம். அவ்வருமை நோக்கியே திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பிறர் ஒருவரையும் பாடாத அத்துணை விரிவான நிலையில், பல திருப்பாடல்களால் இவரது திருத் தொண்டினை விரித்துப் பாடியருளினார். சிவபெருமானையன்றிப் பிறரொருவரையும் பாடாத திருஞான

சம்பந்தர் இவரது பெருமையை மிக விரிவாகப் பாடியருளினர் என்ருல்—இவரை 'நம்பி' என்று மட்டும் குறித்தல் அமையுமோ? அமையா தன்ருே! அதனை ஆழ்ந்து நோக்கியே ஆளுடைய நம்பிகள், இவரை, 'பெருநம்பி—குலச் சிறை' என்றும் அவர்தம் 'அடியார்க்கு அடியேன்' என்றும் போற்றியருளினர்.

பொய்கூருது மெய்யே கூறும் நல்லிசைப் புலவர்களால் பாடப் பெறுதலையே பெரும்பேருக் கருதுவர் நன் மக்கள். "உரையும் பாட்டும் உடையோர் சிலரே—மரையிலைபோல மாய்ந்திசினோர் பலரே" (புறம்) எனவும் "புலவர் பாடும் புகழுடையோர் விசும்பில்—வலவன் ஏவா வானவூர்தி—எய்துப என்பதாம் செய்வினை முடித்தெனக் கேட்பல் எந்தை சேட்சென்னி நலங்கிள்ளி" (புறம்) எனவும் வரும் நல்லிசைப் புலவர் கூற்றுக்களாலும், வஞ்சினங் கூறும் வழி, "ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி—மாங்குடி மருதன் தலைவனுக—உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்—புலவர் பாடாது வரைக என் நிலவரை" (புறம்) என்ற தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் கூற்றினுலும் புலவரால் பாடப் பெறுதல் எத்துணைச் சிறப்பாக மதிக்கப்பட்டது என்பது இனிதுணரப்படும்.

இங்ஙனமாக, இறைவன் திருவருளை முழுவதும் பெற்று இறைவனே யாகிநின்ற ஒருவரால் ஒரு பாடலன்றிப் பல பாடல்களால் உளங்குளிர ஒருவர் பாடப் பெறுவாராயின்—அவர் போலப் பிறர் ஒருவரும் அவரால் பாடப் பெற்றிலராயின் அவரது பெருமையை என்னென்பது! ஆகவே அவரை வன்ருெண்டர் "பெருநம்பி குலச்சிறை" என்று அருளியது எத்துணைப் பொருத்தம் என்பது உணர்க.

இக் குலச்சிறையாரது பெருமை யனைத்தையும் திருஞான சம்பந்தரே விரித்தோதிச் சென்றமையால், அவரது திருப்பாடலின் பொருளை விரிக்கும் அளவே சேக்கிழார் இந்நாயனரது புராணத்திற் கூறினர். அப் புராணத்துள் சேக்கிழாரது பாடல்கள் பல, திருஞான சம்பந்தரது திருப்பாடலின் உரையாகவே விளங்குதலைக் காணலாம். அவ்விருவரது திருப்பாடல்களிலும் காணப்படும் குலச் சிறையாரது இயல்புகளே மேற் கூறப்பட்டன. திருஞான சம்பந்தர் இக் குலச் சிறையாரது திருத்தொண்டினை விரித்துப்பாடிய திருப் பாடல்களை, மூன்ருந் திருமுறையில் "மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவை" என்னும் திருப்பதிகத்தில் கண்டு மகிழலாம்.

இயல்பாகவே சிவபெருமானிடத்தும், சிவனடியாரிடத்தும் பேரன்புடையாராகிய குலச் சிறையார்க்கு, அத் தன்மையையே உடையாராய் தமது நாட்டில் அவநெறி நீக்கிச் சிவநெறி வளர்க்க முயன்ற அரசமா தேவியர்க்கு உண்மைத் தொண்டராய் உழைத்தல் இயற்கையும் கடமையும் ஆயிற்று. இதனைச் சேக்கிழார்,

**"பாய சீர்புனை பாண்டிமா தேவியார்**
**மேய தொண்டுக்கு மெய்த்தொண்டராயினர்"**

என்று அருளினர்.

இத் தொண்டினை மேற்கொண்ட குலச் சிறையார், அரசமாதேவியார் விருப்பத்தின்படி ஆளுடைய பிள்ளையாரை மதுரையில் வருவித்து, அவரால் அரசனையும் உய்வித்து, அவன் ஆணையின் வழியே பரசமயம் நிராகரித்து, பாண்டிநாடு முழுவதும், வென்றிகொள் திருநீற்று ஒளியினில் விளங்கவும் செய்தார்.

இந்தகைய திருவருள் வெற்றியிலும், திருவருட் புகழிலும் தமக்குப் பிறரொருவரும் ஒப்பும் உயர்வும் இல்லாது விளங்கிய குலச் சிறையார், உண்மையில் பெருநம்பியாரேயாகிய நாயனுரே யன்ருே! அவரது திருவடிக்கு ஆட்செய்யுமாற்ருல் அவரது சிவ பத்தி சிவனடியார் பத்திகளில் ஒரு சிறிதேனும் நாம் பெற்று உய்வோமாக.



# சிவஞானபோதம்

திரு. க. வச்சிரவேல் முதலியார், B.A., L.T. காஞ்சிபுரம்.

**எட்டாஞ் சூத்திரம் :—**

**ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்**
**தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்த**
**விட்(டு)**
**அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே.**

எனவரும்.

முன் சூத்திரத்தில், ஆன்மா உலகத்தையும் முதற் பொருளையும் அறிந்து நுகரும் இயல்பினது என்றும், அஃது உலகை அறியும்போது மாயாகாரியமாகிய தத்துவங்களைக் கருவியாகக் கொண்டு அறிந்து, அத் தத்துவங்களின் தன்மையே தன் தன்மையாகக் காணப்படும் என்றும், அதுபோல முதற்பொருளைத் தலைப்பட்டுணரும் நிலையில் திருவருளையே சார்பாகப் பற்றி நின்று அதனால் விளங்கியறியும் என்றும் கூறப்பட்டன. அங்ஙனம் ஆன்மா தான் அறியுமாற்றை எவ்வாறு உணரும் எனவும், அங்ஙனம் உணர்வதால் வரும் பயன் இது எனவும், அவ்வுணர்வு கைகூடுவதற்கு முன்னர்ச் செய்யத்தக்கது இது எனவும் உணர்த்துதல் இச் சூத்திரத்தின் கருத்து. 'ஞானத்தினை உணரும் முறைமையினை உணர்த்துதல் நுதலிற்று' என்றனர் மெய்கண்ட தேவர்.

**சூத்திரத்தின் பொழிப்பு :—** முதற்பொருள் ஆன்மாக்களின் அறிவுக்கறிவாய் நின்று உணர்த்தி வருவது என ஐந்தாஞ் சூத்திரத்துக் கூறப்பட்டது. ஆன்மாக்கள் முன்பிறப்புக்களில் செய்துகொண்ட சிவபுண்ணிய மிகுதியால், அம் முதற்பொருளே குருவடிவங் கொண்டு வெளிப்பட்டுத் தோன்றிப் பின்வருமாறு உணர்த்தும் :—'அரச குமாரனைப்போன்ற நீ வேடர்கள் போன்ற தத்துவங்களோடு கூடி அறிவு விளங்கப் பெற்று வந்தமையால், நின் பெருந்தன்மையை அறியமாட்டாது மயங்கி இடர்ப்பட்டாய்; நீ சிவமாகிய எம்மைச் சார்ந்து அந்தமில் இன்பம் நுகர்தற்கு உரியை'' இங்ஙனம் உணர்த்த உணரும் அவ்வான்மா அத் தத்துவங்களின் சேர்ச்சியை அப்போதே விட்டொழித்து முதற்பொருளின் பேரின்ப மயமான திருவடிகளை இருமையின் ஒருமையாந் (அத்துவிதமாந்) தன்மையின் அணைந்து மீளாது என்றபடி.

அரன்-பாசங்களை அரித்து உயிர்களைத் தன் கண் அடங்கி நிற்கச் செய்பவன். **அயர்ந்தனை வளர்ந்து** என்றதை, **வளர்ந்து அயர்ந்தனை** என மாறுக.

இச்சூத்திரம் முதல்வனை மன்ன வனாகவும், உயிரை மன்னவ குமாரனாகவும், ஐம்பொறி முதலிய தத்துவங்களை வேடர்களாகவும் உருவகிக்கின்றது.

வெண்கொற்றக் குடையும், மணிமுடியும் அரியாசனமும் மன்னவர்க்கே உரிய சிறப்படையாளம். முதல்வன் எல்லா உலகங்களுக்கும் மூலகாரணமாய், எல்லாவற்றையும் ஒருங்கே அறிந்து எப்பொருளையும் தொழிற்படுத்த வல்லவனாய் உளன்; மூலகாரணமா மியல்பு வெண் கொற்றக் குடைபோன்றது; எல்லாம் செலுத்த வல்லுதல் சிங்காதனம் போன்றது. ஆதலால் முதல்வனை மன்னவனாக உருவகித்தார் ஆசிரியர். முதல்வனது உடைமையாகிய உயிர் உலகு என்பவற்றுள், உயிர் முதல்வனைப்போல் அறிவுடைப் பொருளாயும், முதல்வனது பேரானந்தப் பெருஞ்செல்வம் முழுவதும் தனதேயாகக் கொண்டு நுகரும் உரிமை உடையதாயும் உள்ளது. ஆதலால் அது மன்னவ குமாரனாக உருவகிக்கப்பட்டது. தத்துவங்கள் ஆன்மாவின் வியாபக வுணர்வைத் தடுத்துச் சிறுமைப் படுத்துதலாலும் விதி விலக்கை உணராதபடி மறைத்து இழிதொழிலில் நிற்பித்தலாலும், வேடராக உருவகம் செய்யப்பட்டன.

இச் சூத்திரத்துள், **தவத்தினில் உணர்த்த** என்றது ஓரதிகரணம், **தம் முதல்**

குருவுமாய் என்றது ஓரதிகரணம், ஐம்புல வேட ரின் அயர்ந்தனை வளர்ந்தென உணர்த்த என் றது ஓரதிகரணம், விட்டு அன்னியமின்மை யின் அரன் அழல் செலுமே என்றது ஓரதிகர ணம்; ஆக நாற்கூற்றது இச் சூத்திரம்.

## முதலதிகரணம்

**1. வார்த்திகம் :** ஈண்டு இவ்வான்மாக் களுக்கு முற்செய் தவத்தான் ஞானம் நிகழும் என்றது, மேற்சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டி யல்லது மோக்ஷத்தைக் கொடா ஆகலான்.

**2. (அ) இங்குத் தன்றுற் கூறப்படும் பொருள் :—** முதல்வனது தடத்த நிலை உணர்ந்து செய்யும் வழிபாடாகிய தவங் காரணமாகவே மெய்யுணர்வு உண்டாகும்; அம் மெய்யுணர்வே வீடு பேற்றிற்கு நேர்ச் சாதனமாம்.

"கிரியைஎன மருவுமவை யாவும் ஞானம்
கிடைத்தற்கு நிமித்தம்எனக் கிளக்கும்; உண்மைச்
சரியைகிரி யாயோகத் தன்மை யோர்க்குச்
சாலோக சாமீப சாரூபங்கள்
மருவியிடும்; உயர்ஞானம் இரண்டாம் மாறு
மலமகல அகலாத மன்னு போதத்
திருவருள்ஒன்(று); ஒன்(று) அதனைத் தெளிய வோதும்
சிவாகமம்என் றுலகுறியச் செப்பும்நூலே"

என்னும் சிவப்பிரகாசச் செய்யுள் இவ் வதிகர ணப் பொருளின் தெளிவைக் கொண்டுள்ளது.

"ஐயுணர்(வு) எய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு"

என்னும் திருக்குறள் இவ் வதிகரணத்திற்கு மூலப் பொதுமறையாக அமைந்துள்ளமை கருதி உணர்தற்கு உரியது. புலன் வேறுபாடு பற்றி ஐந்து வகைப்பட உணரும் மனம், ஒரு தலைப் படும்படி யோக முதிர்ச்சி எய்தினும் அத ஞற் பயனில்லையேயாம்; அதனுற் பின்னர் எய்துதற்கு உரிய மெய்யுணர்வு இல்லாதவர்க்கு என்பது திருக்குறளின் பொருள். தலைமைபற்றி யோகத்தைக் குறித்துக் கூறினுராயினும், இனம்பற்றி ஏனைச் சரியை, கிரியை, தீக்கை முதலியவையும் கொள்ளப்படும்.

**(ஆ) இதன்கண் ஐயப்பாடு :—** தவமே வீடுபேற்றைப் பயக்குமோ, ஞானம் வாயிலாகப் பயக்குமோ எனவும், சிவாகமங்களுள் தவம் எனப்படும் சரியை கிரியா யோகங்களே ஞானம் நிகழ்தற்கு ஏதுவாகுமோ, வேதத்துட் கூறப்படும் வேள்விகளே ஏதுவாகுமோ என வும் நிகழும் தடுமாற்ற வுணர்வு.

**(இ) பிறர் கூறும் பக்கம்:—**

(i) சரியை கிரியா யோகங்களே வீடு பேற்றைப் பயக்கும்; தீக்கையொன்றே வீடு பேற்றிற்கு நேர்ச் சாதனம், ஞானமும் தீக் கைக்கு வாயிலாவது. இங்ஙனம் கூறுவோர் புராணிகர்களும் சிவாகமங்களை ஆராய்ந்தோ ருட் சிலரும்.

(ii) வேதத்துட் கூறியுள்ள வேள்வி முதலி யனவே வீடு பேற்றைப் பயப்பன—இவ்வாறு கூறுவோர் மீமாஞ்சகர்.

**(ஈ) மறுத்துரைக்கும் சித்தாந்தத் துணிபு:**

முதற்பொருள் பசுபாச ஞானங்களுக்கு எட் டாது சிவஞானம் ஒன்றனுக்கே விளங்கி அனு பவிக்கப்படுவன் என ஆருஞ் சூத்திரத்துட் கூறப்பட்டது. திருவள்ளுவனுரும் "சிறப்பென் னும் செம்பொருள் காண்பது அறிவு" எனவும் "சார்பு உணர்ந்து சார்புகெட வொழுகின்" எனவும் மெய்யுணர்வு ஒன்றனையே வீட்டிற்கு நேர்ச் சாதனமாகக் கூறினர். ஏனைச் சரியை கிரியா யோகங்கள் முதல்வனுடைய உருவம், அருவுருவம், அருவம் என்னும் தடத்த வடிவங் களை முறையே புறத்தொழில், அகப்புறத் தொழில், அகத்தொழில், என்பவற்ருல் அணை தலே ஆகலின், அவை முதற்பொருளின் தன் னியல்பை வியாபக வுணர்வால் தலைப்பட்டு இன்புறுவதாகிய ஞானநெறியைப் பயத் தலையே முக்கியப் பயனுக வுடையவை; இடை நிலைப் பயனுகத் தவலோகஞ் சென்று சாலோ கம், சாமீபம், சாரூபம் என்னும் பதங்களையும் தருவனவாம். அங்ஙனம் தவலோகத்தில் இருந்தபடியே அவா அறப் பெற்ருராயின், ஆண்டே ஞானம் விளங்கப்பெற்று வீடு பேறடைவர். இன்றேல் மீள இவ்வுலகில் ஞானத்தைப் பெறுதற்கு உரிய நல்ல சூழ்நிலை

யில் பிறந்து வீடு பேறெய்துவர். இவ் வுண்மையை வீட்டு நூலைக் கற்றறிந்தார் தம் மாசறு காட்சியிற்கண்டு கூறுதலைப் பெரியபுராணம் முதலியவற்றுட் கண்டுகொள்க.

"ஆரா வியற்கை அவா நீப்பின் அந்நிலையே
பேரா வியற்கை தரும்"

என்னும் திருக்குறளும் ஈண்டுக் கருதுதற்கு உரியது.

"தவஞ்செய்தார் என்றுந் தவலோகஞ் சார்ந்து
பவஞ்செய்து பற்றறுப்பார் ஆகத்—தவஞ்செய்து
நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக்
கற்றோர்சூழ் சொல்லுமாம் கண்டு."

இனி, வேதத்துட் கூறப்படும் வேள்வி முதலியவற்றின் பயன் உலக போகமே என்பதை அவ்வேதம் அவ்வக்கன்மங்களை விதிக்கும்போதே "சுவர்க்கத்தை விரும்புவோன் வேள்வி செய்க." "ஆயுளை விரும்புவோன் ஆயுள் ஓமம் செய்க" என்றுற்போல இசைத்தலின், அவை சரியை கிரியா யோகங்களைப் போல ஞானம் நிகழ்தற்கு ஏதுவாகாமை மட்டுமன்றி, ஏனை உலக வினைகள்போல ஞானம் நிகழ்தற்குத் தடையாய் நிற்பவையாகும்.

அவற்றைச் செய்தார்க்கு வரும் பயன் பசித்து உண்டு, அவ்வுணவு அற்றபோது பின்னும் பசிப்பார்க்கு அவ் வுணவால் வரும் பயனை ஒக்கும். மற்றுச் சரியை முதலிய கடவுள் நல்லறம் இயற்றுவார்க்கு உளதாகும் பயன் அமுதவுண்டியால் வரும் பயனை ஒக்கும். அமுதவுண்டி பசியையும் நீக்கும்; முக்கியமாக, நரை திரை மூப்பின்றி நீண்டநாள் வாழத் துணைபுரியும். அதுபோன்று, சரியை முதலியவை சாலோக முதலியவற்றை அவாந்தரப் பயனாகத் தரினும், தாம் மேல் மேல் வளர்வனவாய் உயிர்க்கு இருவினையொப்பை வருவித்து ஞானம் விளக்குதலை முக்கியப் பயனாக வுடையவை.

யான் எனது என்னும் மயக்க வுணர்வோடு அவ்வப் பயன் கருதிச் செய்யப்படும் உலக வைதிக நல்வினைகள் தீவினையோடு ஒப்பப் பிறவியைத் தந்து ஞானம் நிகழ்தற்குத் தடையாம்; கடவுள் நல்லறம் அவ்வினைத் தொடக்கறுத்து வீடு பேற்றிற்குப் பரம்பரையால் சாதனமாம் என்னும் அரிய நுண்ணிய உண்மையைத் திருவள்ளுவர்,

"இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு"

என்னும் அருமைத் திருக்குறளால் உய்த்துணர வைத்தல் காண்க.

பசித்துண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும்
இசைத்து வருவினையில் இன்பம்—இசைத்த
இருவினை யொப்பில் இறப்பில் தவத்தான்
மருவுவனும் ஞானத்தை வந்து.

இசைத்து வருவினை :—தம்மைச் செய்ய வேண்டி நூலை ஆராய்வார்க்குத் தம்மைப் புலப்படுக்கும்போதே தம்மால் வரும் காமியப் பயனை உடன் கூறிக்கொண்டே வரும் வைதிக வினைகள்.

இசைத்த—சமமாக வைத்துணரப்படும். இசைத்த இருவினை—பந்தம் செய்தற்கண் முறையே பொன் விலங்கும் இரும்பு விலங்கும் போலச் சமமாகச் சொல்லப்பட்ட புண்ணிய பாவங்கள். இவற்றையே திருவள்ளுவர் இருள் சேர் இருவினை என்றார். இறைவன் பொருள் சேர் புகழ்புரிதல் என்பது உபலக்கணத்தால் நினைத்தல் வணங்கலையும் உடன் குறிக்கும்.

ஆன்மாக்களின் அறிவு படிமுறையான் வளர்ந்து நுணுகி உணர்வதாகலின், அஃது இருள்சேர் இருவினை, இறப்பில் தவம், ஞானம் என்னும் இவற்றைப் படிமுறையாற் பற்றி மேம்படும் என்பதை,

"புறச்சமய நெறிநின்றும்
அகச்சமயம் புக்கும்,
புகன்மிருதி வழியுழன்றும்
புகலும் ஆச்சிரம
அறத்துறைக ளவையடைந்தும்
அருந்தவங்கள் புரிந்தும்
அருங்கலைகள் பலதெரிந்தும்
ஆரணங்கள் படித்தும்
சிறப்புடைய புராணங்கள்
உணர்ந்தும் வேத
சிரப்பொருளை மிகத் தெளிந்தும்
சென்றாற் சைவத்
திறத்தடைவர்; இதிற் சரியை
கிரியா யோகம்
செலுத்தியபின் ஞானத்தாற்
சிவனடியைச் சேர்வர்"

என்னும் சிவஞான சித்தித் திருவிருத்தம் இனிது விளக்குகின்றது.

(முதல் அதிகரணம் முற்றிற்று)

# *கன்னியாகுமரிக் கல்வெட்டுகள்

வித்துவான். திரு. வை. சுந்தரேச வாண்டையார்,
அண்ணுமலைப் பல்கலைக்கழகம்

**கன்னியாகுமரியைப் பற்றிய குறிப்புகள் :**

குமரி என்பது கன்னியாகுமரி என்றும், வழங்கப்பெறும். இது இந்தியாவின் தென் கோடியில் உள்ளது. இது பார்வதி அல்லது துர்க்கையின் பெயரால் கன்னியாகுமரி என்னும் பெயர் எய்திற்று. தாலமி (Ptolemy) என்பார் (கி.பி. 150) குமரிமுனையைக் குமாரிய அக்ரான் (Komaria Akron) என்னும் பெயரால் குறிப்பிட்டுள்ளனர். பெரிப்ளஸ் என்னும் நூலின் ஆசிரியர் (The author of the Periplus) இங்கு வந்து மக்கள் கடலாடுவதைக் கி. பி. 85-இல் குறித்துள்ளனர். தாலமியும், பெரிப்ளஸ் என்னும் நூலின் ஆசிரியரும் கொற்கை என்பதைக் கொகாய் (Kohhoi) என்றும், அதுவே பாண்டிய மன்னர்களின் பழைய தலைநகரம் என்றும், அது கன்னியாகுமரிக்கு அருகில் கிழக்குக் கடற்கரையில் அமைந்திருக்கிறது என்றும், அதுவே முத்து வாணிபத்திற்கு உரிய இடமென்றும் குறித்துள்ளனர். கால்டுவெல் (Caldwell) அவர்கள் ஆண்களும் பெண்களும் இங்கு வந்து கடலாடுவதைக் கூறியுள்ளார். (Caldwell's History of Tinnevelly P. 19 Indian Anti; Vol. VIII). கன்னியாகுமரி இந்துக்களுக்கு ஒரு புனிதமான தலம். இங்குக் கடல் நீராடிக் கன்னி பகவதியாரை வணங்கினல் மக்கள் தாங்கள் செய்துள்ள பாவங்கள் நீங்கும் என்பதை மகாபாரதம் வனபர்வம் 23-ஆம் சுலோகம் குறிப்பிடுகிறது. இது புனித தலம் என்பதைக் கல்வெட்டுக்களில் செதுக்கப் பெற்றுள்ள அறச் செயல்களின் காப்புரைகளில் "இது அழித்தார் கங்கையிடைக் குமரியிடை செய்தார் செய்த பாவத்துப்படுவர்," "கங்கையிடைக் குமரியிடை எழுநூற்றுக் காதஞ் செய்தார் செய்த பாவங் கொள்வார்;" என்பவைகளால் அறியலாம். இங்கு மக்கள் வந்து நீராடுவதை ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்ருகிய மணிமேகலையில்,

> "குரங்கு செய்கடற் குமரியம் பெருந்துறைப்
> பரந்துசென் மாக்களொடு தேடினன் பெயர்
> வோன்."
>
> (ஐந்தாம் காதை அடிகள் 37—38)

> "பார்ப்பனி சாலி காப்புக் கடைகழிந்து
> கொண்டோற் பிழைத்த தண்டம் அஞ்சித்
> தென்றிசைக் குமரி யாடிய வருவோள்"
>
> (13-வது ஆபுத்திரன் திறம் அறிவித்த காதை அடிகள் 5.—7.)

> "நடவை வருத்தமொடு நல்கூர் மேனியள்
> வடமொழி யாட்டி மறைமுறை யெய்திக்
> குமரி பாதங் கொள்கையின் வணங்கித்
> தமரில் தீர்ந்த சாலியென் போள்தன்னை."
>
> (மேற்படி காதை. அடிகள் 72—75)

என்னும் அடிகள் உணர்த்தும்.

மகமதிய சரித்திரப் பேராசிரியர் அபுவைதா (Abufeida) (1203—4) குமரி முனையை ராஸ்கும்காரி (Ras Kumhari) என்றும், அது மாபர்க்கும் (பாண்டி நாட்டுக்கும்) மலபார்க்கும் இடைப்பட்ட எல்லைப் பகுதியில் உள்ளது என்

---

* See the Madras Epigraphical collection for the year 1896 Nos 92 to 109.
Travancore Archaeological series Vol. I P. 22.
Travancore Archaeological series Vol. III Part I.
Kanyakumari Ins. of Virarajendran.
Travancore Archaeological series Vol. IV P. 65.
Travancore Archaeological series Vol. V P. 195, 199.
Travancore Archacological series Vol. VI Nos. 102, 111, 112, 113, 114, and pages 126, 147.

றும் குறித்துள்ளனர். பதினைந்தாம் நூற்றுண்டின் இறுதியில் வெனிஸ் நகரத்திலிருந்து இங்கு வந்த மார்க்கோபோலோ (Marcopolo) குமரி இந்தியா தேசத்தைச் சேர்ந்தது. இங்குப் பலவகையான குரங்குகளும், காடுகளில் கரடி, சிங்கம், சிறுத்தைப் புலிகள் முதலிய மிருகங்களும் இருக்கின்றன எனக் குறித்துள்ளனர்.

பாண்டியர்களுக்குள்ள குமரிச் சேர்ப்பன், கன்னிகாவலன் என்னும் பட்டப் பெயர்கள் குமரி பாண்டியர்க்குரியது என்பதைப் புலப்படுத்துகின்றன.

## கல்வெட்டுக்கள் :

இத் திருக்கோயிலில் சோழ மன்னர்களில் முதலாம் இராசராசசோழன், முதலாம் இராசேந்திர சோழன், வீர ராசேந்திர சோழன் இவர்கள் காலங்களிலும்; பாண்டிய மன்னர்களில் கோச்சடையவர்மரான சுந்தரசோழ பாண்டியன், கோமாறபன்மரான விக்கிரம சோழ பாண்டியன், ஸ்ரீ பராந்தக தேவன் இவர்கள் காலங்களிலும்; சேர மன்னர்களில் உதய மார்த்தாண்ட வர்மன், வேணாட்டு அரசன் மணிகந்த ராமவர்மன், இவர்கள் காலங்களிலும் நாயக்க மன்னர்களில் முத்துவீரப்ப நாயக்கர் காலத்திலும் செதுக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இவைகளன்றி, பாலராமவர்மன் காலத்துச் செப்பேடும் ஒன்று உண்டு.

இவைகளில் இறைவியார், கன்னியார் பிடாரியார், குமரிக் கன்னியா பகவதியார், குமரிப் பகவதி நாச்சியார், கன்னியா குமரிப் பகவதி அம்மன், பூமகள் என்னும் திருப் பெயர்களால் குறிக்கப் பெற்றுள்ளனர். இக் கன்னி பகவதியார் பாண்டியர்களுக்குக் குலதெய்வமாவர். இச் செய்தி "தென்னவர் தங்குல தெய்வம் தென்குமரி கன்னியார் தம் திருநாள் விழா வதனில் தைப்பூசப் பிற்றை ஞான்று வந்திருந்தோ ரெல்லார்க்கும் மாற்றுதே தியாகமிட அறத்தால் விளங்கிய ஆய்ந்த கேள்விப் புறத்தாய நாடு பூமகட்களித்து" என்னும் பராந்தக தேவரின் 9-வது ஆண்டுக் கல்வெட்டுப் பகுதியால் அறியக் கிடக்கின்றது.

## அளிக்கப்பெற்ற நிவந்தங்கள் :

கன்னி பகவதியார் கோயிலில் நெய் கொண்டு ஒரு நுந்தாவிளக்கு எரிப்பதற்கு இராசமார்த் தாண்டனும் மற்றொருவனும் ஐம்பது சாவா மூவாப் பேராடுகளை முதலாம் இராசராச சோழனின் 16-ஆம் இராச்சிய ஆண்டில் கொடுத்துள்ளனர். இங்ஙனமே பாண்டிய மன்னர்களின் கல் வெட்டுக்களிலும் நுந்தா விளக்குகளுக்கு நிவந்தங்கள் அளிக்கப்பெற்ற செய்திகள் கூறப்பெற்றுள்ளன. இராசகேசரி வர்மன், வீர ராசேந்திரன் கல்வெட்டு கன்னி பகவதியார்க்கு இராசராசப் பாண்டிநாட்டு உத்தம சோழவள நாட்டுப் புறத்தாயநாட்டு நற்றிராக் குடியில் இருநூற்று எழுபத்தொன்றே முக்காலே இரண்டு மாவும், இந்நாட்டுப் பெருங்குடி கீழ்க்கொம்பு உட்பட்ட நிலன் ஐம்பத்தொன்பதே ஒன்பதின் சொச்சமும் கொடுக்கப்பட்டதை அறிவிக்கின்றது. உதய மார்த்தாண்ட வர்மர், குமரியில், நித்தல் மாபூசை கொண்டு எழுந்தருளி இருந்தருளும் நாச்சியார் குமரி, பகவதி நாச்சியார்க்கு வீரமார்த்தாண்டன் சந்திக்கு அமுதுசெய் தருளுகைக்கு நிவந்தம் அளித்திருந்தார். முத்துவீரப்ப நாயக்கர் கொல்லம் 782-ல் அதாவது கி.பி. 1607-ல் குமரி பகவதி நாச்சியார்க்குக் காலை சந்திப் பூசைக்கு ஆண்டொன்றுக்கு நெல்கோட்டை ஐம்பத்தாறேகாலுக்கும், பணம் முப்பதுக்கும், ஆகப் புல்லங்குறிச்சி பற்றில் நிலம் விட்டிருந்தார். பராக்கிரம பாண்டியன் தன் பிறந்த நட்சத்திரமாகிய தைப்பூசத் திருநாளில் கன்னி பகவதியார்க்குத் திருவமிர்து, சாந்துப்படி, சந்தனம் கற்பூரம் இவைகளுக்காகப் புறத்தாயநாட்டைக் கொடுத்துள்ளான்.

## கன்னியாகுமரியைத் தன்னகத்துக் கொண்டுள்ள நாடு

இது 'இராசராசப் பாண்டிநாட்டு உத்தம சோழவள நாட்டுப் புறத்தாய நாட்டுக்குமரி' என்று வீர ராசேந்திர சோழன் கல்வெட்டில் குறிக்கப் பெற்றுள்ளது. இந்தப் புறத்தாயநாடு வேணாட்டு அரசன் மணிகந்த ராமவர்மன் காலத்தில் தென்வாரணவாசி நாடு என்னும் பெயர் எய்திற்று.

## பொதுச் செய்திகள்

கன்னிபகவதியார் எழுந்தருளியிருக்கும் இப்போதுள்ள கர்ப்பஇல், பழமை பொருந்தியது அன்று. அது நரசிங்கபுரத்து, கிருஷ்ண

ராஜரால் கட்டப்பெற்றதாகும். (Indian Anti; Vol. IV P. 317) இக் கோயிலில் உள்ள வீர ராசேந்திர சோழனின் கல்வெட்டு மிகமிக முக்கியமானது. அது இக்கோயில் மணிமண்டபத்தில் ஆறு தூண்களில் செதுக்கப் பெற்றுள்ளது. அது 444 வரிகளை உடையது. அதில் 420 முதல் 444 வரிகள் முடிய தமிழ்ப் பகுதியாகும். ஏனையவை வடமொழிப் பகுதிகள். இந்த வடமொழிப் பகுதி சோழ மன்னர்களின் வம்சாவளியைத் தெளிவாகக் கூறுகின்றது. இதைத் திருவாளர். K. V. சுப்பிரமணிய ஐயர் B.A., M.R.A.S. அவர்கள் திருவாங்கூர் இராச்சியக் கல்வெட்டுத் தொகுதி மூன்று பகுதி ஒன்றில் வீரராசேந்திரனின் கன்னியாகுமரிக் கல்வெட்டு என்ற தலைப்பில் சிறந்த ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன் பதிப்பித்துள்ளனர்.

பாலராமவர்மன் (கி.பி. 1760) செப்பேட்டில் கன்னியாகுமரி ஊர் பிரமசந்தியில் கன்னி விநாயகர் கோயில் குறிக்கப்பெற்றுள்ளது. மேலும் அச்செப்பேடு, கன்னியாகுமரிப் பகவதி அம்மன் கோவிலில் சிகரத்தில் கீழ்ப்புறத்தில் வரிவாசல் வழியாக திருவந்திப் பாக்கட்டை பழமை மாறி டை திருவந்திப் பாக்கட்டையும் பலகையும் பகுந்து இட்டதற்குச் செலவானது என்பதைக் குறிப்பிடுகின்றது. இதில் திருவந்திப் பாக்கட்டை என்பதற்கு the beam put up on the sacred joining place (ie) entrance எனக் கல்வெட்டுத் துறையாளர் பொருள் எழுதியுள்ளனர்.

## இக்கோயில் கல்வெட்டிலுள்ள பராக்கிரம பாண்டியனின் மெய்க்கீர்த்தி

ஸ்வஸ்திஸ்ரீ திருவளரச் செயம் வளரத் தென்னவர்தங் குலம் வளர அருமறை நான் கவை வளர அனைத்துலகுந் துயர் நீங்கத் தென் மதுராபுரித் தோன்றித் தேவேந்திரனோ டினிதிருந்து மன்னர்பிரான் வழுதியர்கோன் வடிம்பலம்ப நின்றருளி மால்கடலை எறிந்தருளி மலையத்துக் கயல் பொறித்துச் சேரலனைச் செருவில் வென்று திறைகொண்டு வாகைசூடிக் கூபகர் கோன் மகட் கொடுப்பக் குலவிழிஞங் கைக்கொண்டு கன்னிப்போர் செய்தருளிக் காந்தளூர்ச் சாலைகல மறுத்து மன்னுபுகழ் மறையவர் தம் மணியம்பலத்துள் இனிதிருந்து ஆயிரத் தெண்மர் அவிரோதப் பணிப்பணியால் மறை பேர்த்துக் கல்நாட்டிப் பண்டுள்ள பேர்தவிர்த்து நிறுப்பனவும் அளப்பனவும் கயலெழுதி அனந்தபுரத் தெர்மாற்கு நிலவிய பொன் மணிவிளக்கு நின்றெரியப் பத்தமைத்து ஆங்கமைந்த தாய நல்லூர் அட தென்னாட்டரையனென அறிவகையால் அறிந்துணர்ந்து தென்னவர்தங் குலதெய்வம் தென்குமரி கன்னியார் தம் திருநாள் விழாவதனிற் றைப் பூசத்தின் பிற்றைஞான்று வந்திருந்தோ ரெல்லார்க்கும் மாற்றுதே தியாக மிட அறத்தால் விளங்கிய ஆய்ந்த கேள்விப் புறத்தாய நாடு பூமகட்களித்துத் தெலுங்க வீமன் குளங்கொண்டு தென்கலிங்கம் அடிப்படுத்துத் திசையணைத்தும் உடனுண்ட ஸ்ரீபராந்தக தேவற்கு யாண்டு 9 ஆவது ........ என்பதாகும். (Taken from the Travancore Archaeological series Vol. I page 29.)

## இம் மெய்க்கீர்த்திப் பகுதியால் அறியப்படும் செய்திகள் :—

### 1. வீரச் செயல்

பராக்கிரம பாண்டியன் சேர மன்னனை வென்று திறை கொண்டான். கடல்துறைப் பட்டினமாகிய விழிஞத்தைக் கைக் கொண்டான். காந்தளூர்ச் சாலையில் கப்பல்களை அழித்தான். தெலுங்க வீமனது தென் கலிங்க நாட்டைத் தன்னடிப் படுத்தினான்.

### 2. முன்னோர் செயலைத் தன்னுடையதாகக் கொண்டது

தேவேந்திரனோடு இனிது இருந்தது. வடிம்பு அலம்ப நின்று மால்கடலை எறிந்தருளியது. மலையத்துக் கயல் பொறித்தது.

### 3. பிற செயல்கள்

தென் திருவாங்கூர் அரசன் மகளை மணந்து கொண்டான். அளப்பனவும் நிறுப்பனவும் ஆகிய கருவிகளில் கயல்மீனைப் பொறித்துள்ளான்.

4. அனந்தபுரத்து இறைவனுக்குப் பொன் மணிவிளக்கு நின்று எரியப் பத்து அமைத்தான். அதன்பொருட்டு நல்லூர் என்னும்

# தஞ்சாவூரில்

# ஹரி கதா காலக்ஷேபப் பயிற்சிப் பள்ளி

கலைவளங் கொண்ட சோழ நாட்டின் தலை நகரான தஞ்சாவூரில் 9-7-63 அன்று ஹரிகதா காலக்ஷேபப் பயிற்சிப் பள்ளியை, அறநிலைய இலாகா அமைச்சர் **கனம் பக்தவத்சலம்** B.A.B.L. அவர்கள் ஆரம்பித்துப் பேசுகையில், நாதசுரம், ஆகமம், சிற்பம், சுதை முதலிய பலகலைகளுக்கு அறநிலைய இலாகா புத்துயிருட்டுவது போல், ஹரிகதைக்கும், ஒரு பயிற்சிப்பள்ளி தொடங்க விரும்பியதாகவும், இதற்கான இடம் தஞ்சை நகர் தானென்று கருதி இங்கு முதலில் ஆரம்பிக்கப் படுவதாகவும் குறிப்பிட்டார். தமிழக முதல்வர் கனம் **திரு. காமராஜ்** அவர்கள் இக் கலையைக் காக்கவேண்டுமென்று குறிப்பிட்ட தாகவும், அதையொட்டி இப்பள்ளி நிறுவ ஆவன செய்யப்பட்டதாகவும் கூறினர்.

இப் பள்ளி நிர்வாகக் குழுவின் தலைவர் **திரு. கே. சோமசுந்தரதேசிகர்** M. A., அமைச் சரையும் கமிஷனரையும் வரவேற்று, சங்கீத மும்மணிகளின் நாதம் ஒலித்த சோழமண்ட லத்தில், இப்பயிற்சிப்பள்ளி ஆரம்பமாவது மிக வும் பொருத்தமானதென்றும், இதற்கு உறு துணையாக நின்று உதவும், அமைச்சர், கமிஷனர் ஆகியோரது பெருமுயற்சியாலும், திருவாவடுதுறை ஆதீனத்தின் நிதி உதவி யாலும் இப்பள்ளி தொடங்கப்படுவதாகவும், 6 மாணவர்களும் 4 மாணவிகளும் இதில் தற் சமயம், நிதி உதவி பெற்றுப் பயில முன்வந்துள் ளதாகவும், பக்தியைப் பரப்ப இது பெரிதும் உதவுமென்றும் கூறி வரவேற்பிதழை வாசித் தளித்தார். பள்ளியின் நிர்வாகக் குழுவின்

---

கன்னியாகுமரிக் கல்வெட்டுக்கள் ... ...

ஊரைக் கொடுத்துள்ளான். தங்கள் குலதெய்வ மாகிய கன்னி பகவதியார்க்குப் புறத்தாய நாட் டைக் கொடுத்தான். தனது பிறந்த நட்சத் திர மாகிய தைப்பூசத்தின் மறுநாளில் வந்தி ருந்தவர்களில் வேண்டியவர்க்கு வேண்டிய தைக் கொடுத்தான்.

## இம் மெய்க்கீர்த்திப் பகுதிக்குச் சில குறிப் புரைகள்:—

தேவேந்திரனோடு இனிது இருந்து—இவ் வாறு இருந்தவன் உக்கிரகுமார பாண்டியன். வழுதியர் கோன்வடிம்பு அலம்ப நின்றருளிக் கடல்தன்னை வணங்க நின்றருளியவன் - உக்கிர குமார பாண்டியன்.

**மால்கடலை எறிந்தருளி—**
**கடல்சுவற வேலை விட்டவன்**
**உக்கிர குமார பாண்டியன்**

கூபகர்கோன்-தென் திருவாங்கூர் நாட்டர சன். விழிஞம்—திருவனந்தபுரத்துக்குத் தெற் கில் 10 மைல் தூரத்தில் உள்ளது. இது ஒரு கடல் துறைப்பட்டினம். முதற் குலோத்துங்கச் சோழன் இப் பட்டினத்தைப் பிடித்து அதற்குக் குலோத்துங்க சோழன் பட்டினம் என்று பெயர் வைத்துள்ளான். இப்பால் 13-ஆம் நூற்றுண்டில் பராந்தக பாண்டியன் இதைக் கைப்பற்றிக் கொண்டான்.

புறத்தாயநாடு—இக்காலக் கன்னியா குமரிப் பிரதேசம் இந் நாட்டைச் சேர்ந்ததாகும். 'அறத்தால் விளங்கிய ஆய்ந்த கேள்வி புறத்தாய நாடு' என்பதால் இந் நாட்டினர் அறச் செயலிலும், கல்வியறிவிலும் மேம்பட்டவர் எனப் புலப் படுகின்றது. கன்னியார்—என்பதைக் கன்னி யார்க்கு என்று பொருள் கொள்ளவேண்டும்.

—o—

சார்பில் அதன் செயலாளரும் பொருளாளரு மான திரு. எஸ். சோமசுந்தரம் B.A.B.L., திருவா வடுதுறை ஆதீனத்தின் சார்பில் திரு. எஸ். சங்கரம் பிள்ளை ஆகியோர், அமைச்சர் கமிஷனர் ஆகியோருக்கு மலர் மாலைகள் சூட்டினர்.

விழாவிற்குத் தலைமை தாங்கிய அறநிலைய ஆணையர் திரு. எம். எஸ். சாரங்கபாணி முதலியார் B.A.B.L., பேசுகையில், ஹரிகதையில் இயல், இசை, நாடகம் ஆகிய மூன்றும் ஒன்றாக அமைந்து ஞானிகளுக்கும், பாமரர்களுக்கும், இன்பத்தையும், பக்தியையும் உண்டாக்கு வதாகவும், மனிதனது நல்வாழ்விற்கு இது மிகவும் தேவையான தென்றும் கூறி, இப் பள்ளி மேலும், மேலும் வளர வேண்டும் என்றும்; மிகுதியான மாணவ மாணவிகள் இப் பள்ளியிற் சேர்ந்து பயன் பெறுதல் வேண் டும் என்றும் குறிப்பிட்டார்.

## தொடக்கவிழா

அறநிலைய இலாகா அமைச்சர் கனம் பக்தவத்சலம் B.A.B.L., அவர்கள் வெள்ளிக் குத்து விளக்கை ஏற்றிவைத்துப் பள்ளியை ஆரம்பித்து வைத்தார்கள். ஹரிகதை என்பது ஒரு தெவிட்டாத கலை. இராமாயணம், பாரதம் போன்றவைகளைப் பலர், பலதடவை கூறிய போதிலும் சலிப்பு ஏற்படவில்லை என்றும், இக் கலை முதலில் மகாராஷ்டிரத்திலிருந்து வந்த போதிலும், தமிழகப் பெரியார்கள் இதனைப் பெரிதும் வளர்த்துள்ளார்களென்றும் ஆலயங் களில் இதுபோன்ற ஹரிகதைகளை ஏற்பாடு செய்யவேண்டுமே தவிரக் கூட்டத்தைக் கூட்டு வதற்காகச் சினிமாப் பாடகர்களை அழைப்பது லக்ஷியத்திற்கு முரணான தென்றும், கலை வளர்த்துவரும் திருவாவடுதுறை ஆதீனம் இதற்கு நிதி உதவ முன்வந்தது போற்றுதற் குரியதென்றும், மதுரையில் ஒரு பல்கலைக்கழகம் உண்டாவதற்குப் பழநி தேவஸ்தானம் பெரிதும் உதவுவதாகவும் கூறினார்கள்.

ஷை பள்ளியின் கௌரவ முதல்வரான பிரம்ம ஸ்ரீ அண்ணாசாமி பாகவதர், ஹரிகதை களைப் பழங்காலத்தில் பணநோக்கமற்ற ஞானிகள் கூற, அரசர்கள் கேட்டன ரென்றும், பாகவத மகாத்மியத்திலிருந்து ஒரு சுலோ கத்தைக் குறிப்பிட்டு மக்களிடையே அன்பு, அறிவு, பக்தி, ஒற்றுமை, ஒழுக்கம், பண்பாடு முதலியவைகளைக் கதா காலட்சேபங்கள் வளர்த்து நிலவச் செய்யுமென்றும் விளக்கிப் பேசினர்.

அறநிலைய இலாகா முன்னாள் தலைவர், திருச்சி திரு. டி. எம். நாராயணசாமி பிள்ளை அவர்கள் பேசுகையில், ஹரிகதாகாலட்சேபம் முதியோர்களுக்கும் எளிய முறையில் தத்து வங்களை விளக்கி நல்வழிப் படுத்துவதால் இது ஒரு முதியோர் கல்வித்திட்டம் போன்றதாகு மெனக் குறிப்பிட்டார். பல பிரமுகர்கள் விழா வில் கலந்து கொண்டனர். பல ஆசிச்செய்தி களும் வந்திருந்தன. பள்ளி நிர்வாகக்குழு அங்கத்தினரான திரு. ப. ச. வெங்கடகிருஷ்ண பிள்ளை நன்றி கூறிப் பேசுகையில், பொதுவாக நாட்டிலும், சிறப்பாக தஞ்சையிலும் ஹரிகதைக் கலை வளர்ந்த நிலையை விளக்கி, இப்பள்ளியை ஏற்படுத்த உதவிய அனைவருக்கும் நன்றி கூறினார். ஆரம்பத்திலும், முடிவிலும் பள்ளி மாணவ மாணவியர் பிரார்த்தனைக் கீதமும் மங்கள கீதமும் முறையே பாடினர்.

## வெண்பா

மும்மைத் தமிழ்க்கூடல் மூலலிங்கத் தங்கயற்கண்
அம்மைக் கமுதாம் அருமருந்தை — வெம்மைவினைக்
கள்ளத் திருக்கு, ஓயிற் காணலாம் கண்டீர்! நம்
உள்ளத் திருக்கோயில் உள்.

—குமரகுருபர சுவாமிகள்.

# மதுரை மீனாட்சி கோயில் மகா கும்பாபிஷேகம்

மகா கும்பாஷேகம் என்று இன்று நாம் வழங்குவதைக் கடவுள் மங்கலம் என்றும் பெரும் சாந்தி என்றும் தமிழ் ஏடுகளிலும் கல் வெட்டுகளிலும் தமிழ் மக்கள் வழங்கி வந்திருக் கின்றனர்.

இவ்விழா நாள் தோறும் செய்யப் பெறுவ தன்று. ஆலயங்களில் இறைவன் இறைவிய ருக்கு நாள் தோறும் செய்யப் பெறுகிற அபி ஷேகம் சாந்தி அல்லது நீராட்டு நியமச் சிறப் புடையதேயன்றித் தனிச் சிறப்புடைய பெரும் சாந்தியிலிருந்து வேறுபட்டதாகும். பன்னி ரண்டு ஆண்டுக்கொரு முறை ஒரு ஆலயத் தில் பெரும் சாந்தி செய்வித்தல் வேண்டுமென்று கூறுவர்.

அன்னை மீனாட்சி கோயில் மகா கும்பாபி ஷேகம் தமிழக வரலாறு காணாத சிறப்புடைய தாகையால் அவள் தன் திருவருளும் தமிழ் மக் கள் இதுவரை பெறாத பெரு வெள்ளமாய்ச் சுரந்து காக்கின்றது எனலாம். புதிய ஆலயத் தைக் கட்டிக் கும்பாபிஷேகம் செய்வித்த தமிழ் மன்னர்கள் வரலாறு ஏட்டில் அடங்காது. ஆனால் மீனாட்சி கோயில் திருப்பணியை நிறை வேற்றி அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் செய்வித்த வரலாறு சிறப்பால் சொல்லில் அடங் காததாகும். சுமார் 16 ஏக்கர் பரப்பளவுள்ள ஆலயக் கட்டிடங்களும், 12 கோபுரங்களும், 2 விமானங்களும் செப்பனிடப் பெற்ற வண்ணங் களுடன் தோன்றும் காட்சியே மனிதன் கற் பனைக்கெட்டாத அதிசயக் காட்சியாகும். ஆல யத்தில் மூர்த்திகளுக்கு அஷ்டபந்தன மருந்து சார்த்தப் பெற்றது.

மகா கும்பாபிஷேகம் என்றாலே இந்து சமு தாயத்திற்கு, அதிலும் சைவ வைணவப் பற் றுடையோருக்கு ஒரு புதிய மகிழ்ச்சி ஆரவா ரம் உள்ளுணர்வாய் எழுகின்றது. மீனாட்சி கோயில் தமிழ் மக்களின் கலைச் செல்வமாகை யால் அங்கு நடைபெற்ற பெரும் சாந்தியை எதிர்நோக்கிய பெருமக்கள் எண்ணிலடங்கார்.

மீனாட்சியின் கும்பாபிஷேகத்திற்கென நிறுவிய திருப்பணிக்குழு தமிழ் நாட்டிலும் இலங்கையிலும் பரந்து வாழும் தமிழினத்தின் குரலாய் அமைந்தது. தமிழவேள் பி. டி. இரா சன் அவர்களைக் குழுவின் தலைவராய்ப் பணி செய்ய உறுப்பினர்கள் வேண்டிக் கொண்ட னர். கும்பாபிஷேக நிகழ்ச்சிகள் ஒவ்வொன் றிலும் திரு. தமிழவேள் அவர்கள் உடனிருந்து சிறப்பித்தனர்.

சோபகிருது ஆண்டு சித்திரைத் திங்கள் 9-ஆம் நாள் யாகசாலைக்கு முகூர்த்தக் கால் நாட்டும் விழா மதுரை நகர மக்கள் யாவரும் அறிய வைகையாற்றிலிருந்து விருதுகளுடன் மண் எடுத்து வந்து விநாயகர் பூஜையுடன் சிறப்பாய் நடை பெற்றது. யாகசாலை நிர்மாண வேலையில் ஆலய இறைபணியாளரின் மேற் பார்வையில் முக்கிய பங்கு கொண்டவர்கள் தொழில் முறையால் நால்வர். திரு. அயோத்தி ராமக் கொத்தனார், திரு. ராமகிருஷ்ணன் ஆகிய இருவரும் கட்டிட வேலையிலும், ஆலய ஊழியர் திரு. சோமுக் கொத்தனார் கொட்டகை நிர்மாணம் அலங்காரப் பணியிலும், திருவாத வூர் திரு. உடையார் ஆச்சாரியார் எல்லாவித மான அலங்கார மர வேலையிலும், திரு. நட ராஜன் என்பவர் தனது சிறந்த சித்திர வேலை யிலும் பல ஊழியர்களை வைத்துக் கொண்டு பங்கு கொண்டனர். தேவஸ்தான எஞ்சினியர் திரு. ஆ. ஜவஹர் அவ்வப்போது ஆலோசனை யும் தெரிவித்து உதவினார். யாகசாலைப் பிளா னும் தயார் செய்து வழங்கினார்.

யாகத்தில் மீனாட்சியின் ஆச்சார்யம் திரு. ம. க. சுந்தரேசபட்டர் வகிப்பதென்றும், சுந்த ரேசப் பெருமான் ஆச்சார்யம் திரு. சா. சுப்பா பட்டர்வகிப்பதென்றும், சர்வசாதகம் திருவாவடு

துறை திரு. சுவாமிநாத சிவாச்சாரியார் வகிப்ப தென்றும், ஆச்சார்ய வரணம் செய்விக்கப் பெற்றது. இவ்விழாவின் நடு நாயகமாய் தமிழ வேள் அவர்கள் விளங்கினுர்கள். அடுத்து சித்தி விநாயகர் தொடங்கிச் சந்நிதிதோறும் அனுமதி கோரும் வைபவம் நாதசுர வாத்தியங் களுடன் நடைபெற்றது. தமிழவேள் அவர் களின் வேண்டுகோளின்படி, சித்தி விநாயகர் சந்நிதியில் விநாயகர் ஹோமமும் அன்று நடைபெற்றது. இன்னும் அன்னே மீனுட்சி ஓர் மகாராணியாகையால் அவளது பெரும் சாந்தி விழாவிற்காக அன்றைய தினம் நகரத் தில் உள்ள மற்ற தேவதைகள் யாவருக்கும் அபிஷேகம் முதலான சிறப்பு வழிபாடுகள் செய்து அவ்வவ்வாலயப் பிரசாதங்களும் வந்து சேர்ந்தமையால் சிவாச்சாரியார் முதலான யா வரும் மீனுட்சியின் திருவருளால் எல்லா தேவ தைகளின் அருளுக்கும் பாத்திரராயினர். கும்பா பிஷேகப் பெரு விழாவின் நல்லறிகுறி இது வெனத் தேவரும், மக்களும் உணர்ந்தாற் போன்று வாத்திய இசை விண்ணிலும் மண்ணி லும் எதிரொலித்து நின்றது.

18—6—63 முதல் 20—6—63 வரை அடுத் தடுத்து நிகழவேண்டிய வைபவ அங்கங்கள் இனிது நடைபெற்றன. நவக்கிரக ஹோமம், ரட்சோக்ந ஹோமம், கிராமசாந்தி, பிரவேச பலி, ஆச்சார்ய தசவித மங்களகிரியைகள், வாஸ்து சாந்தி, சாந்தி ஹோமம், மூர்த்தி ஹோமம், சம்ஹிதா ஹோமம் ஆகியவை முறைப்படி நடைபெற்றன.

21—6—63 மாலையில் வைகையாற்றங் கரையில் மிருத்சங்கிரஹணம் யாக பூஜைக்கு மண் எடுக்கும் விழா நகர மக்கள் பல்லாயிரவர் முன்னிலையில் நடை பெற்றது. அஸ்திர தேவர், விநாயகர், சண்டிகேஸ்வரர் வைபவத்திற்கு எழுந்தருள யாக பூஜைக்கென மண் சகல விருதுகளுடன் நகர் வலமாக எடுத்து வரப் பெற்று யாகசாலையில் சேர்க்கப் பெற்றது.

22—6—63 ஆம் நாளன்று அங்குரார்ப்ப ணம், ரக்ஷா பந்தனம் யாக சாலையில் வாத்திய கீதங்கள் முழங்க நடை பெற்றன. அன்றைய தினம் காலையில், அறநிலையத்துறைப் பொறுப்பு வகித்த அமைச்சர் திரு. சர்க்கரை மன்ருடியார் அவர்கள் ஆலயத் திருப்பணியினைப் பார்வை யிட்டு யாகசாலை அமைப்பையும் கண்டு நல் லாசி வழங்கினுர்கள். மாலையில் அங்குரார்ப் பணம். ரக்ஷாபந்தனம் நடை பெறும்போது யாக சாலைக்கு வந்து கலந்து கொண்டார்கள்.

23—6—63-ஆம் நாள் காலையில் ஆலயத் தில் மீனுட்சி சுந்தரேசுவரர் பரிவார மூர்த்தி கள் எல்லாவற்றையும் கலை இறக்கிக் கடஸ்தா பனம் செய்யும் விழா 10-30 மணிக்கு ஆரம்ப மாகியது. அதனை அமைச்சர் திரு. சர்க்கரை மன்ருடியார் அவர்கள் வந்து கவனித்தார்கள். பொதுமக்கள் ஆலய அறங்காவலர்கள் எல் லோரும் உடனிருந்து சிறப்பித்தனர். காலை 11-30 மணிக்குள் பரிவார தேவதைகள் எல்லா வற்றையும் கடத்தினில் மந்திர பூர்வமாய் ஆவாகனம் செய்து பரிவார தேவதைகளுக் கென நிர்மாணிக்கப் பெற்ற யாகசாலையில் சேர்க்கப் பெற்றது. இரவு 10-25 மணி முதல் 11-10 மணிக்குள் மீனுட்சி சுந்தரேசுவரர் சந் நிதிகளில் கலாகர்ஷணம் செய்யும் விழா திருப் பணிக் குழுத் தலைவர் முன்னிலையில் மிகவும் பயபக்தியுடன் நடைபெற்றது. இவ்வைபவத் திற்குப் பொது மக்கள் அனுமதிக்கப்பெற வில்லை. சிவாச்சாரியார்கள் ஒரே குரலில் பிரார்த்தித்து மந்திர பூர்வமாய் அன்னை மீனுட் சியையும் பெருமான் சொக்கநாதரையும் கங் கை முதலான புண்ணிய தீர்த்தம் நிறைந்த தங்கக் குடங்களில் ஆவாகனம் செய்வித்தனர். அம்மை அப்பரின் முக்கிய பரிவாரங்களும் விமானம் கோபுரங்களும் அப்போது கலா கர்ஷணம் செய்யப்பெற்றன. கடங்கள் கோயிலிலிருந்து யாகசாலைக்குப் புறப்பட்ட காட்சி மறக்க வொண்ணுதது. திருவருள் துணைகொண்டு அம்மை அப்பரையும் இதர மூர்த்திகளுடன் யாகசாலையில் எழுந்தருளச் செய்ய இயன்றது. பலவாயிரம் மக்கள் இறை வன் இறைவியின் யாகசாலைப் பிரவேசத்தைக் காண இரவென்றும் கருதாமல் காத்திருந்தனர். இரவு 12 மணி அளவில் யாகசாலை முதற்கால யாகம் ஆரம்பமாயிற்று. காலை மூன்று மணி வரை யாகம் நடைபெற்று அதன் பின் யாக சாலைப் பூஜை, தீபாராதனை நடைபெற்றது.

ஆலயத்தில் மொத்தம் மூர்த்திகள் ஐந்நூறுக்கும் மேற்பட்டனவாகும். இதர மூர்த்திகள் யாவும் வடக்கு ஆடிவீதி ஐந்து நிலைக் கோபுர வாசல் நுழைவை அடுத்திருக் கும் கூட்டு வழிபாட்டு மண்டபத்தில் நிறுவப் பெற்ற யாகசாலையில் கடஸ்தாபனம் செய்யப் பெற்றன. எல்லா மூர்த்திகளுக்கும் 32 ஏக

குண்டயாகசாலைகள் வகுக்கப்பெற்றன. ஸ்நபனுங்கம் இரண்டு வேதிகைகள் கட்டப் பெற்றிருந்தன. பழைய சொக்கநாதர் ஆலயத்திற்கும் கூட்டு வழிபாட்டு மண்டப யாகசாலையிலேயே யாகசாலை அமைக்கப்பெற்றது. இம் மண்டபத்தில் கடஸ்தாபனம் செய்யப்பெற்ற மூர்த்திகள் யாவும் ஆறு கால யாகபூஜையினைப்பெற்று 26-6-63 காலை 11-30 மணிக்குக் கும்பாபிஷேகம் செய்யப் பெறுவனவாயிருந்தன. பொதுமக்கள் இந்த யாகசாலையை நன்ருய் வலம் வருவதற்கு ஏதுவாய் மூர்த்திகள் எல்லாம் திரு வருளுடன் காட்சியருளின.

யாகபூஜைக்கு 203 சிவாச்சாரியார்கள் கலந்துகொண்டனர். 110 குண்டங்கள் கொண்ட யாகசாலையை இதுவரை தமிழகம் வரலாற்றில் கண்டதில்லை. ஆகவே 203 சிவாச்சாரியார்கள் கலந்து கொண்ட யாகமோ, கும்பாபிஷேகப் பெருவிழாவோ தமிழ் நாட்டில் இதுவரை நடை பெற்றதில்லை. திருவாவடுதுறை ஆதீன சிவாச்சாரியார் திரு. சுவாமிநாதகுருக்கள் அவர்களின் சர்வசாதகத்திற்கு உட்பட்டு மற்ற 202 சிவாச்சாரியார்களும் பணி செய்தனர். தமிழ் நாட்டின் எல்லா மாவட்டங்களிலிருந்தும் இவர்கள் வரவழைக்கப் பெற்றனர்.

யாகசாலையின் அணிவிளக்காய்ப் பொது மக்கள் கவனத்தைக் கவர்ந்தது நால் வேத, திருமுறைப் பாராயணக் குழுவினர் காட்சியாகும். ருக்வேதம், யஜுர்வேதம், சாமவேதம், அதர்வணவேதம் என்ற நான்கு பிரிவோடு சுக்லயஜுர் பாராயணத்திற்கும் சாஸ்திரிகள் வரவழைக்கப்பெற்றனர். மொத்தம் வேதபாராயணத்திற்கு 103 சாஸ்திரிகள் கலந்து கொண்டனர். ருக்வேதத்திற்கு 12 பேர்களும், யஜுர் வேதத்திற்கு 40 பேர்களும், சாமவேதத்திற்கு 20 பேர்களும், அதர்வண வேதத்திற்கு 2 பேர்களும், சுக்கில யஜுஸிற்கு 9 பேர்களும் கலந்து சிறப்பித்தனர். மேலும் பன்னிரு திருமுறையினையும் ஆதியோடந்தம் பாராயணம் செய்ய ஓதுவா மூர்த்திகள் நியமிக்கப் பெற்றனர். அடுத்து சம்பந்தர் தேவாரம், அப்பர் தேவாரம், சுந்தரர் தேவாரம், மணிவாசகர் திருவாசகம் இசையோடும் பக்கவாத்தியங்களுடனும் ஒலிபெருக்கி துணைகொண்டு நான்கு குழுவினர் யாகம் ஆரம்பித்த நேரம் முதல் பாடி, பொது மக்களை இறையருள் வயப்படுத்தினர். நால்வர் பாமாலைகளை இசைப்பதற்கும், பன்னிரு திருமுறை பாராயணம் செய்வதற்கும் கலந்து கொண்ட ஓதுவா மூர்த்திகள் அறுபது பேர்களாகும்.

யாகத்தில் சமித்துக்கள் மட்டும் சுமார் 35 டன் எடையுள்ளனவாகும். 32 வகை சமித்துகள் தயார் செய்யப்பெற்றன. இன்ன வகை கிடைக்கவில்லை என்ற சொல்லே எழவில்லை. பொள்ளாச்சியிலிருந்து ஒரு அன்பரும், தாராபுரத்திலிருந்து ஒரு அன்பரும் சுமார் 20 வகையான அபூர்வமான சமித்துக்களை வழங்கி மீனுட்சி சுந்தரேசுவரரின் இன்னருளுக்குப் பாத்திரராயினர். குண்டங்கள்யாவும் அண்ணுமலையான் அருள் சோதி போல் ஆறு நாள்கள் ஒளிவிட்டுத் திகழ்ந்தன. 23-6-63 இரவு ஒரு காலயாகபூஜையும் 24-6-63 முதல் 27-6-63 வரை நாள் தோறும் இரு காலயாக பூஜையும், 28-6-63 தேதி காலையில் ஒரு காலயாக பூஜையும் ஆக 10 காலயாக பூஜை நடைபெற்றது. காலம் ஒன்றுக்குச் சுமார் ரூ. 10,000/- மதிப்புள்ள யாகப் பொருள்கள் ஆகுதியாய் இடப் பெற்றனவெனக் கொள்ள வேண்டும். சுமார் லக்ஷரூபாய் மதிப்புள்ள உக்கிராணப் பொருள்கள் யாகத்தில் பயன்படுத்தப்பெற்றன. யாககாலங்களில் பொது மக்களிடமிருந்து ஏராளமான நெய், அரிசி, தேங்காய் போன்ற உபயப் பொருள்களும் கிடைத்தன. மீனுட்சியின் அரசுரிமைக்கேற்ப எல்லாம் ராஜாங்கத் திட்டம் என்ற பேச்சு பொது மக்களிடம் சாதாரணமாய்ப் பழக்கத்திலிருந்தது. வலங்கிமான் திரு. கிருஷ்ண பிள்ளை அவர்கள், தமக்குக் கீழ் 20 பணியாளர்களுடன் யாகப் பொருள்களைத் திறம்பட எடுத்து வழங்கினுர்.

24—6—63 காலையிலிருந்தே திரளாக மக்கள் யாகசாலையைக் கண்டு வணங்கினர். காலை பூஜையினைக் காஞ்சி காமகோடி பீடம் புதுப் பெரியவரும், மாலைப் பூஜைக்குப் பெரியவர் ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகளும் தினசரி வந்திருந்து காட்சியளித்தனர். சில சமயங்களில் இருவருமே வந்திருந்து இறைவன் இறைவியை வணங்கியும் பொது மக்களுக்கு ஆசி கூறியும் மகிழ்வித்தனர். தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களும் 24—6—63 காலையில் யாகசாலைக்கு வந்து தரிசித்துச் சென்ருர்கள். பின்பு 26—6—63 மாலையில் மறுமுறையும் வந்

திருந்து வணங்கி, ஆசியும் வழங்கினார்கள். தருமை ஆதீன மகா சந்நிதானம் அவர்கள் பெருமான் சொக்கநாதருக்கும் அன்னை மீனாட்சிக்கும் அஷ்டபந்தன மருந்து சார்த்துவதில் நேரடிக் கவனம் செலுத்தியும் உடனிருந்து திருப்பணித் தலைவர் திரு. தமிழவேள் அவர்களையும் ஆலய அறங்காவலர், தலைவரையும், இறைபணியாளரையும் ஊக்குவித்தார்கள். அம்மையப்பர் பீடத்தில் பொன்னும் மணியும் வழங்கியருளவும் செய்தனர். ஆலய இருப்புத் தங்கமும் பீடத்தகடாய் அம்மையப்பருக்கு அணிவிக்கப் பெற்றது. ஸ்தபதிகள் மருந்து சார்த்தி இறையருளும் பெற்றனர்.

யாக பூஜைக்குப் பல பெரியோர்கள் வந்து சிறப்பித்தனர். தமிழ்நாடு அறநிலையத் துறை அமைச்சர் திரு. எம். பக்தவத்சலம் அவர்கள் 27—6—63 தேதியன்று மாலையில் ஆலயத்திற்கு வருகை தந்தார்கள். தமிழ் நாடு மாநிலக் கவர்னர் ஸ்ரீ விஷ்ணுராம் மேதி அவர்களும், கேரள மாநிலக் கவர்னர் ஸ்ரீ வி. வி. கிரி அவர்களும், மத்திய அரசினர் அமைச்சர் திரு. சி. ஆர். பட்டாபிராமன் அவர்களும், தமிழ் நாடு அறநிலையத் துறை அமைச்சர் திரு. எம். பக்தவத்சலம் அவர்களால் ஆலயத்திற்கு அழைத்து வரப்பெற்றனர். மீனாட்சி சுந்தரேசுவரர் மகா கும்பாபிஷேக மலரினையும் 'கோயில் மாநகர்' என்ற திருப்பணிக்குழு வெளியீட்டினையும் தமிழ் நாடு கவர்னர் அவர்கள் வெளியிட்டார்கள். பின்பு அமைச்சர் அவர்கள் நல்லுரை வழங்கி, தமிழவேள் பி.டி. ராசன் அவர்களுக்கு நன்றியும் தெரிவித்தார்கள்.

26—6—63 மாலையிலிருந்து யாகசாலை, மற்றும் கும்பாபிஷேக ஏற்பாடுகள் யாவும் அறநிலையத்துறை ஆணையர் திரு. எம். எஸ். சாரங்கபாணி முதலியார் அவர்கள் நேரடிப் பார்வையில் நடைபெற்றன. சென்னை அரசாங்கப் பல்வேறு துறைகளின் தலைமை அதிகாரிகளும் யாக பூஜைக்கும் கும்பாபிஷேகத்திற்கும் வந்து கலந்து கொண்டனர். இன்னும் அறநிலையத் துறை ஆலோசனைக் குழுவும் மதுரையில் 27-6-63-ஆம் நாளிலிருந்தே செயல் பட்டது எனலாம். குழுவின் உறுப்பினர்கள் யாவரும் யாகபூஜையில் கலந்து மகிழ்ந்தனர். யாகசாலையில் வரும் பெரியோர்களை வரவேற்கும் பொறுப்பை அறநிலையத் துறை ஆணையர் அவர்களின் நேர்முக உதவியாளர் திரு. ஜி. ஆதிமூலம் அவர்கள் கவனித்து வந்தார்கள்.

26—6—63-ஆம் நாள் காலை 11-30 மணியிலிருந்து 12 மணிக்குள் ஆலயத்தில் சித்தி விநாயகர் முதலான எல்லா பரிவார மூர்த்திகளுக்கும் கும்பாபிஷேகம் நடைபெறக் குறிக்கப் பெற்றிருந்தது. காலை 10 மணிக்குக் கூட்டு வழிபாட்டு மண்டபத்தில் நடைபெற்ற யாக சாலைப் பூஜைகள் பூரணாகுதி, தீபாராதனையுடன் முடிவுற்றன. 10-30 மணிக்குப் பரிவார கடங்கள் புறப்பாடு செய்யப்பெற்று அந்தந்தச் சந்நிதிக்குச் சென்றன. இவ்விழாவில் காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகளும், புதுப்பெரியவரும் வந்து கலந்து சிறப்பித்தார்கள். சித்தி விநாயகருக்கும் முக்குறுணி விநாயகருக்கும் ஒரே நேரத்தில் கும்பாபிஷேகம் நடைபெற்றது. பரிவார மூர்த்திகள் கும்பாபிஷேகத்தில் மங்கையர்க்கரசிக் கெனக் கட்டப்பெற்ற புதிய மண்டபத்திற்கும் கும்பாபிஷேகம் செய்விக்கப் பெற்றது. மண்டபத்தில் ஸ்தாபிக்கப் பெற்றிருக்கும் சிவலிங்கம், பாண்டியன், நெடுமாறன், மங்கையர்க்கரசி, அமைச்சர் குலச்சிறையார், ஆளுடைப் பிள்ளையார் திருஞான சம்பந்தர் ஆகியோருக்குச் சிறப்பு வழிபாடு, காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் முன்னிலையிலும் தமிழவேள் ஐயா அவர்கள் முன்னிலையிலும் நடைபெற்றது.

27—6—63-ஆம் நாள் மாலையில் யாக சாலையே தமிழ்நாடு அரசியல் அதிகாரிகளாலேயே நிறைவுற்றிருந்தது எனலாம். அன்னை மீனாட்சியின் திருவருளுக்கு யாவரும் பணி செய்ய முன் வந்தனர் என்றே தோன்றிற்று. திருப்பணிக் குழுத் தலைவர் திரு. தமிழவேள் அவர்களை முறைப்படி அமரச் செய்து மகிழ்வித்தார்கள். மறுநாள் காலையில் நடைபெற விருந்த கும்பாபிஷேகத்திற்கு ஒத்திகையும் நிகழ்வது போல் நிகழ்ச்சிகள் தோன்றின.

28—6—63 காலை 6 மணிக்கு யாகசாலை பூஜை கடைசி முறையாக முடிவுற்றது. பூரணாகுதி, தீபாராதனை முடிவுற்றதும் தமிழவேள் அவர்களிடம் யாத்திராதானம் பெறும் வைபவம் சிவாச்சாரியார்களால் செய்து வைக்கப் பெற்றது. தமிழவேள் அவர்கள் தமது மனைவியார் உடனிருக்க யாத்திராதானம் வழங்கி யாகக் கடங்களைப் புறப்பாடு செய்து வைத்தார்கள். சரியாக ஏழு மணிக்கு அன்னை மீனாட்சியின் பொன் கடமும், பெருமான் சுந்தரேசுவர

ரின் பொன் கடமும் இதர வெள்ளிக்கடங்களுடன் ஆரவாரத்துடன் பஞ்சவாத்தியம்—திருவாரூர் சிறப்பு இசைக்கருவிகள்—நாதசுரம் இசை முழங்கப் புறப்பாடு செய்யப் பெற்றன. ஐந்து ஜதை மேளங்களும் நாதசுர வாத்தியங்களும் இசைமாரி பொழிந்தன. தேவ வாத்தியங்கள் விண்ணில் அதிர நல்வேளையில் அம்மையப்பர் மா மதுரை மக்களையும் தமிழகத்தையும் திருவருள் வெள்ளத்தில் திகழச் செய்யப் புறப்பட்டனர். திரு. எம். எஸ். சாரங்கபாணி முதலியார் அவர்களும், துணை ஆணையர் திரு. ஏ. சக்கரை அவர்களும், உதவி ஆணையர் திரு. சூரியராஜ் அவர்களும் திருப்பணிக்குழு உறுப்பினர்களும் கடங்கள் புறப்படும்போது உடனிருந்து சிறப்பித்தனர்.

காலை சுமார் 8-30 மணிக்கு தமிழ்நாடு அறநிலையத்துறை அமைச்சர் திரு. எம். பக்தவத்சலம் அவர்கள் ஆலயத்திற்கு வந்து அன்னை மீனுட்சி மூலஸ்தானக் கடத்தினைத் தரிசனம் செய்தார்கள். அன்னை மீனுட்சி கோயிலிலும் பெருமான் சொக்கநாதர் கோயிலிலும் தமிழ்நாடு கைத்தொழில் வியாபாரத் துறையினர் தொழிற்சாலையில் செய்யப்பெற்று சென்னை ஜி. பாலசுப்பிரமணியம் கம்பெனியினர் உபயமாய் வழங்கிய அழகான சரவிளக்குகளைக் கனம் அமைச்சர் அவர்கள், தமிழவேள் திரு. பி. டி. ராசன் அவர்களும் ஏற்றிவைத்தனர். அமைச்சர் அவர்கள் சுவாமி அம்மன் விமானங்களுக்கிடையே தனியாய் அமைக்கப் பெற்றிருந்த மேடைக்குச் சென்று கும்பாபிஷேகத்தை எதிர்நோக்கி அமர்ந்தார்கள். சிறிதுநேரத்தில் தருமை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களும் வந்து அமர்ந்தார்கள். காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் தமது குழுவினருடன் அன்னை மீனுட்சியின் விமானம் பக்கமாய்ச் சென்று சாரத்திலேயே அமர்ந்து கொண்டார்கள். தமிழ்நாடு மாநிலக் கவர்னர், திரு. விஷ்ணுராம் மேதி அவர்களும், கேரள மாநிலக் கவர்னர் திரு. வி. வி. கிரி அவர்களும், மத்திய அரசாங்க அமைச்சர் திரு சி. ஆர். பட்டாபிராமன் அவர்களும், தமிழவேள் அவர்களால் ஆலய வாசலில் வரவேற்கப்பெற்று மேல் தளத்திற்கு வந்தமர்ந்தனர். இராமநாதபுரம் ராஜா அவர்களின் குடும்பத்தினர், திருச்சி டி. எம். நாராயணசாமி பிள்ளை அவர்களும் பழநி, திருச்செந்தூர் மன்னார்குடி முதலான ஆலய அறங்காவலர்கள் யாவரும் ஏ, பி, தனிப் பிரிவுகளில் அமர்ந்து கும்பாபிஷேகம் காண விருந்தனர்.

போலீஸ் இலாகாவினர் யாக பூஜை நாள்களிலும், கும்பாபிஷேக நாளிலும் செய்துதவிய பாதுகாப்பு ஏற்பாடுகள் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தனவாகும். கும்பாபிஷேக நேரம் அறிவிக்கும் பொறுப்பை அவர்கள் ஏற்றுக் கொண்டனர். சரியாக 10 மணிக்கு ஒரு எச்சரிக்கை வெடியொன்று வெடித்தனர். அடுத்து சரியாக 10-05 மணிக்கு இரண்டாவது வெடி வெடித்ததும் கும்பாபிஷேகம் விமானம், கோபுரங்கள் எல்லாவற்றிலும் ஒரே நேரத்தில் நடைபெற்றது. மொத்தம் 12 கோபுரங்கள் 2 விமானங்களிலும் 84 கலசங்களில் 84 சிவாச்சாரியார்கள் கும்பாபிஷேகம் செய்த காட்சியை ஒருவன் தன் வாழ்நாளில் பார்க்க முடிந்ததேயென்றுதான் பெருமைப் படவேண்டும்.

கும்பாபிஷேகம் முடிவுற்றதும் அபிஷேக தீர்த்தம் தனிமேடையில் அமர்ந்திருந்த கவர்னர்கள், அமைச்சர்கள் ஆகியோருக்கு வழங்கப்பெற்றது. பின்பு சந்நிதியில் அன்னை மீனுட்சிக்கும் பெருமான் சொக்கநாதருக்கும் அபிஷேகம் நடைபெற்றது: தமிழவேள் அவர்கள் கவர்னர்களையும் அமைச்சர்களையும் அழைத்துச்சென்று அன்னை மீனுட்சியை வணங்கி அருளைப்பெற உதவினார்கள். கும்பாபிஷேகம் முடிந்ததும் அன்னை மீனுட்சிக்கு சென்னை தலைமை பிரஸிடென்சி மாஜிஸ்ட்ரேட் திரு.சோமசுந்தரம் அவர்களின் உபயமாகப் பட்டாடை அணிவிக்கப்பெற்றது. பெருமான் சொக்கநாதருக்கு அம்மாசத்திரம் திரு. முத்துக்குமாரசாமி முதலியார் அவர்களுடைய உபயமாகப் பட்டாடை அணிவிக்கப்பெற்றது.

கும்பாபிஷேக இறுதி அங்கமான மகாபிஷேகம் காலை சரியாக 11-30 மணிக்கு ஆரம்பிக்கப்பெற்றது. இவ்வபிஷேகச் செலவினை சென்னை திரு. ஜி. பாலசுப்பிரமணியம் கம்பெனியினர் ஏற்றுக் கொண்டனர். மகாபிஷேகத்திற்குப் பின்பு அன்னை மீனுட்சிக்கும் பெருமான் சொக்கநாதருக்கும் தமிழ்நாடு தொழில் வர்த்தகத்துறை டைரக்டர் திரு. சபாநாயகம் அவர்களின் உபயமாக விலையுயர்ந்த பட்டாடைகள் அணிவிக்கப்பெற்றன. மதுரை மக்களும் தமிழகப் பெருமக்களும் கும்பாபிஷேக தினத்தன்று அடுத்து இரண்டு நாள்களும் அம்மையப்பரான மீனுட்சி சுந்தரேசுவரரைக் கண்டு இன்புற்றனர். கும்பாபிஷேகத்தன்று இரவு நான்கு மாசிவீதிகளிலும் பஞ்ச மூர்த்தி புறப்பாடும், திருப்பரங்குன்றம் ஸ்ரீ ஆண்டவர் சுப்பிரமணியசுவாமி, திருவாதவூர் மாணிக்கவாசகர், ஸ்ரீ இம்மையிலும் நன்மைதருவார், ஸ்ரீ மதனகோபாலசுவாமி ஆகிய மூர்த்திகளின் புறப்பாடும் விசேஷ நாதசுர முழக்கங்களோடு நடைபெற்றன.

இங்ஙனம் ஸ்ரீ மீனுட்சியம்மை சமேத சுந்தரேசுவரப் பெருமான் திருவருளால் "இனி என்று உளதோ? முன்னும் இல்லை" என்னும் நிலையில், மதுரையிற் கும்பிஷேக நிகழ்ச்சி மிகவும் பெருஞ்சிறப்புடன் இனிது நடைபெற்றது. பல லட்சக் கணக்கான மக்கள் தரிசித்து மாறிலா மகிழ்ச்சியில் திளைத்தனர்.

---

# திருமூலர் திருமந்திரம்

## முன்னுரை:

தமிழ்நாடு, மிகப்பல சான்றோர்களை ஈன்று அளித்த நாடு. வேறு பிற எந்த நாட்டிலும், தமிழ் நாட்டிற்போல 'உயர்வற உயர்ந்த மதி நலம்' அருளப்பெற்ற தெய்வச் சான்றோர்கள் இத்துணை யளவுக்கு மிகுதியாகத் தோன்றிய தில்லை.

தொல்காப்பியரும் திருவள்ளுவரும் மணி வாசகரும் மெய்கண்டாரும் சேக்கிழாரும் திரு மூலரும் போன்ற மாபெருஞ் சான்றோர்களெல் லாம், இந்தத் தெய்வத் தமிழ்நாட்டிலேதான் தோன்றியருளினர். ஆதலின்,

"ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழும் நாடே"

எனப் பிசிராந்தையாரைப் பின்பற்றி, நாம் நம் தமிழ்நாட்டின் பெருமையைக் கூறிக்கொண்டு மகிழலாம்.

## யோகஞான நுண்பொருள் நூல் :

தொல்காப்பியம் போன்ற இலக்கணநூலும், திருக்குறள் போன்ற நீதிநூலும், திருவாசகம் போன்ற பக்திநூலும், சிவஞானபோதம் போன்ற தத்துவநூலும், பெரிய புராணம் போன்ற சமய குரவர் வரலாற்று நூலும், உல கில் வேறெங்கும் இதுகாறும் தோன்றி நிலவக் காண்கிலோம்.

இங்ஙனமே திருமூலர் போன்ற ஒரு சிறந்த சான்றோரும், அவர் இயற்றியருளிய திருமந் திரம் போன்றதொரு யோகஞான அனுபவ நுண்பொருள் நூலும், உலகில் வேறு எங்க ணும் காணப்படுதல் அரிது.

## ஒரு வாசகம் என்று உணர் :

திருமூலரின் அருமை பெருமைகளைத் திறந் தெரிந்து விளக்கும் செயல், நம்மனோர்க்கு எளியதொன்றன்று. இந்நாளில் ஆசிரியர் திரு வள்ளுவர் பெருமானைப்பற்றி உலகம் ஓரளவா தல் அறிந்து கொண்டுள்ளது. ஆனால், நமது அருமைத் திருமூலர் பெருமானைக் குறித்து உல கம் இன்னும் போதிய அளவு உணர்ந்து கொள்ளவில்லை. திருவள்ளுவர்க்கும் திருமூ லர்க்கும், திருக்குறளுக்கும் திருமந்திரத்திற்கும் பெரிதும் நெருங்கிய தொடர்புண்டு.

தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்.

என்பது செவ்விய புலமை அவ்வைப் பிராட்டி யார் அருளிய சிறந்த ஆய்வுரை.

## இரட்டைப் பிள்ளைகள் :

திருவள்ளுவர் உலகியலை வகுத்தருளிய பெரியார். திருமூலர் அருளியலைத் தெளிவுறுத் திய சான்றோர். திருவள்ளுவரின் திருக்குறள் போலவே, திருமூலரின் திருமந்திரமும் உல குக்கு ஒரு பெரும் பொதுநூலாக ஒளிவிட்டு மிளிர்தற்குரிய மேம்பாடுமிக்கது. திருக்குறள் போலவே திருமந்திரமும் 'ஓதற்கெளிதாய் உணர்தற்கு அரியதாய்' ஒளிவிட்டுஇலங்குவது. திருக்குறள் இம்மை வாழ்க்கைக்கு உரியது, திருமந்திரமோ மறுமை வாழ்க்கைக்கு இன்றி யமையாதது.

திருவள்ளுவரும் திருமூலரும் செந்தமிழ்த் தாய் ஈன்றெடுத்த இரட்டைப்பிள்ளைகள்(Twins) போல்பவர்கள் என்னலாம். ஏனெனில், இவர் கள் இருவருக்கும் இடையே அத்துணைக் கருத் தொப்புமைகளும் சாயலும் பெரிதொத்துக் காணப்படுகின்றன.

## தமிழ் ஆகமம் :

திருவள்ளுவர் உலகுக்குப் பொது நூல் உத வினர். திருமூலர் உலகுக்குச் சிறப்புநூல் வழங் கினர். ஒருவர் உலகியல் ஒழுக்க நெறியை உணர்த்தினர். மற்றொருவரோ அருளியல் ஒழுக்க நெறிகளை வகுத்து விளக்கினர். திருக் குறள் தமிழ் வேதம். திருமந்திரம் தமிழ் ஆகமம்.

"அந்தி மதிபுனை அரனடி நாள்தொறும்
சிந்தைசெய்து ஆகமம் செப்பலுற் றேனே"

என்பது திருமூலர் திருமொழி. திருக்குறள் இல்லறம் துறவறம் என்னும் நெறிகளை இனிது விளக்குகின்றது. திருமந்திரமோ சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் செம்பொருட் டிறங்களைத் தெருட்டுகின்றது.

"ஊனமுதற் பிறவிவிடம் தீர்ந்துலகத் தோருய்ய
ஞானமுதல் நான்கும்மலர் நற்றிருமந் திரமாலை"

என ஆசிரியர் சேக்கிழார் சுவாமிகளும் இவ்வுண்மையை இனிது குறிப்பிட்டருளுகின்றார்.

## திருமூலர்

கி.பி. 11 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியினரும், சமண சமயத்தைச் சார்ந்தவரும் ஆகிய **யாப்பருங்கலவிருத்தி ஆசிரியர், ஆரிடக்கவி** என்பதனை விளக்குங்கால், ''ஆக்குதற்கும் கெடுத்தற்கும் ஆற்றலுடையோராய் முக்காலமும் உணர்ந்த இருடிகள் ஆகிய பொய்கையார் குடமூக்கிற்பகவர் பூதத்தார் காரைக்காற்பேயார் மூலர் முதலியோர் பாடிய பாடல்கள் எனக் குறிப்பிட்டு, 'இலைநல' எனவரும் திருமந்திரச் செய்யுளையும் மேற்கோளாக எடுத்துக்காட்டி யுள்ளார். இதனால் பிற சமயத்தவர்களும் கூட, நம் திருமூலரை 'முக்காலமும் உணர்ந்த முனிவர்' எனவும், 'ஆக்குதற்கும் கெடுத்தற்கும் உரிய தவ ஆற்றல் மிக்கவர்' எனவும் கருதி மதித்துப் போற்றியமை தெளியலாம்.

## திருவள்ளுவரும் திருமூலரும் :

திருவள்ளுவர் இயற்றிய திருக்குறளில் அருளிய லுண்மைகள் பாலில் நெய்போல மறைந்து நிற்க, திருமூலர் அருளிய திருமந்திரத்திலோ தயிரில் நெய்போலத் திரண்டு சிறந்து விளங்கித் திகழ்கின்றன.

' உலகியல் வாழ்வில் ஒழுக்கம் நிலைபெறக் கடவுளுணர்ச்சியும் நம்பிக்கையும் மிக மிக இன்றியமையாது வேண்டப்படும்' †. அங்ஙனமே அருளியல் வாழ்க்கை ஆக்கம் பெறுதற்கு உலகியல் ஒழுக்கம் விழுமிய முறையில் உயிரினும் சிறப்புற ஓம்பப் பெறுதல் வேண்டும்.

இவ்வுண்மையை வற்புறுத்துதற் பொருட்டே, ஒழுக்கநெறி வகுக்கப் போந்த திருவள்ளுவர் அதற்கு அடிப்படையாகக் கடவுள் வாழ்த்துக் கூறினார். கடவுளியல் விளக்கத் தலைப்பட்ட திருமூலர் ஒரு சில உலகியல் ஒழுக்கங்களையும் தமது நூலின் தொடக்கத்தே முதற்கண் வற்புறுத்த முற்படுகின்றார்.

திருக்குறள் **செந்தமிழ்த்தாய் தந்த நன்கொடை!** திருமந்திரம் **சிவநெறித் தந்தை** வழங்கிய கலைப்பெரும் பொருட்களஞ்சியம். வாழ்வின் அடிப்படையான பொதுமை முதன்மைக் கருத்துக்களை விளக்கிய திறனால் திருவள்ளுவரை **இளம்பாலாசிரியர்** எனவும், வாழ்வின் முடிந்த முடிபான யோக ஞான அனுபவ உண்மைகளை வகுத்துணர்த்திய மாட்சிமையால் திருமூலரைப் **பெரும்பேராசிரியர்** எனவும் நாம் குறிப்பிட்டு மகிழலாம்.

கற்பவை கற்பிப்பது திருக்குறள்; கற்பன கற்று நிற்கு நெறி நிற்கப் பழக்கிப் பயிற்றுவிப்பது திருமந்திரம். திருக்குறள் நூலோர்க்கு உரியது; திருமந்திரம் ' நூலோருள் நூல்வல்லார்'க்கு உரியது.

## மூல இலக்கியம்

'தென்னிந்தியர்களின் பேரறிவின் பெருவிளைவு' என மேலைநாட்டுப் பேரறிஞராகிய திரு. ஜி. யு. போப் அவர்கள் புகழ்ந்து போற்றிய நமது அரிய பெரிய சைவ சித்தாந்தக் கோட்பாட்டிற்கு ஒரு வகையில் மூல முதலாசிரியர் திருமூலதேவ நாயனாரே யாவார். **'தற்பரங் கண்டுளோர் சைவ சித்தாந்தரே'** என்னும் வரியால் முதன்முதலாகச் **சைவசித்தாந்தம்** என்னும் குறியீட்டுத் தொடரை வழங்கிய பெருமை திருமூலருக்கே உரியது. சைவசித்தாந்த நுண்பொருட் கோட்பாடுகளை விளக்கி மூல முதற் காரணராக விளங்குதல் பற்றியே, அவருக்குத் திருமூலர் எனக் காரணப் பெயர் அமைந்திருத்தல் கூடும் போலும்! சைவசித்தாந்தத்திற்கு ஓராற்றல் 'மூல இலக்கியம்' திருமந்திரமே எனின், அறிஞர்கள் அனைவரும் மருது உடன் படுவர். மூலன் செய்தருளிய இலக்கியம் '' மூல இலக்கியம் '' என்பதில் இழுக்கும் உண்டோ ?

## தாயுமான சுவாமிகள்

வேதாந்த சித்தாந்த சமரசஞான வித்தகச் செல்வர் ஆகிய **தாயுமான சுவாமிகள்**, திருமந்திரம் அருளிச்செய்த திருமூலதேவர் பெருமானைச் **சக்கரவர்த்தி** என்றும், **தவராசயோகி** என்றும் சிறந்தெடுத்துப் பாராட்டி, அவர்தம் அருள் நலத்தைப் பெற ஏக்கற்று விழைகின்றார்.

**''சக்கர வர்த்தி தவராச யோகி எனும்**
**மிக்கதிரு மூலன் அருள் மேவுநாள் எந்நாளோ''**

## அனுபவக் கவிதைநூல்

திருமூலர் ஒப்புயர்வற்ற ஒரு சிறந்த யோகியும் (Mystic), ஞானியும் (Saint) ஆவார். 'மிகச் சிறந்த - மிக மேலான இன்பக்களிப்பின் எல்லையில், இன்பம் நிறைந்த சிறந்த பெருஞானிகளின் திருவுள்ளத்தினின்று இனிய அழகிய கவிதைகள் வெளிப் படுகின்றன' ‡. 'நிறைந்துயர்ந்த அனுபவத்தின் வெளிப்பாடே

---

† "Without religious roots there can be no real, sincere morality, just as without roots there can be no real flowers."
—Count Leo Tolstoy, Essays and Letters, p. 154

‡ "Poetry is the expression of the best and happiest moments of the happiest and best minds."
—P. B. Shelley, A Defence of Poetry.

சிறந்த அழகிய கவிதையாக அமைகின்றது '†. அம்முறையில், யோக சித்தி கைவந்த ஒப்பற்ற சிவஞானப் பெருஞ்செல்வராக விளங்கிய திருமூலர், தமது யோகஞான அருள் அனுபவங்களையெல்லாம் திருமந்திரம் என்னும் கவிதை நூலாக வெளியிட்டருளினர். ஓராண்டுக்கு ஒன்றாக, அவர் திருமந்திரம் மூவாயிரம் பாடல்களையும் அருளிச் செய்ததாகச் சேக்கிழார் சுவாமிகள் குறிப்பிடுகின்றார்.

## புதிர்போலும் புதுவகை நடை

'பிறர்க்குக் கூறத்தக்க பயன் நிரம்பிய செய்தி எதனையேனும் ஒருவன் உண்மையிற் பெற்றிருப்பானாயின், ஒவ்வோர் உயிரும் தனக்கென ஓர் இல்லத்தை அமைத்துக் கொள்வது போல, அச் செய்தியைக் கூறுவதற்கு ஏற்ற முறையைக் கண்டுணர்ந்து அமைத்துக் கொள்ளுதலிலும் கூட, அவன் வல்லவனாக இருப்பான்' ‡. அதற்கு இயைய, நம் திருமூலர் பெருமானும் தாம் உலகுக்கு உணர்த்துதற்குரிய கருத்துக்களை வெளியிடுவதிலும், தமக்கென ஒரு புதிய முறையையும் நடையினையும் வகுத்துக்கொண்டுள்ளார். 'கலை என்பது கலையை மறைத்தலிலேயே அடங்கி இருக்கின்றது. கலைஞனின் கலைத்திறன் அக் கலையை மறைத்து வைத்தலும், ஆராய்ச்சியறிஞனின் வேலை அதனைத் தேடி மீண்டும் கண்டு பிடித்தலுமே யாகும்' * என்பர் அறிஞர். அது போலவே மறைத்துவைத் துணர்த்தும் மாட்சி மிக்க நெறி முறையில், நம் திருமூலரும் 'ஓதற் கெளிதாய் உணர்தற் கரிதாய்' உள்ள ஒருவகைப் புதிர்போன்ற நடையில் (Enigmatic style), கலைத்திறம் கவினத் தம்முடைய திரு மந்திர நூலை அருளிச் செய்துள்ளார்.

## இராமலிங்க சுவாமிகள்

திருமந்திரம், சைவசித்தாந்தச் செம்பொருள் நலங்களை ஒவ்வொருவரும் தாமே தம் அனுபவநிலையில் கண்டு உணர்ந்து கொள்ளும்படி துணைபுரிந்து உதவும் 'நடைமுறைநூல்' (Practical treatise) என்று கூறலாம். அதுபற்றியே இராமலிங்க சுவாமிகள் "தோத்திரங்களில் சிறந்தது திருவாசகம்; சாத்திரங்களில் சிறந்தது திருமூலர் திருமந்திரம்" எனத் திறன் தெரிந்து தெரிவித்தருளினர்.

## திருமந்திர நூற் பொருள்

இம்மை மறுமைக்கு உரிய மறை பொருள் நுட்பங்கள் அனைத்தையும் ஒருங்கெடுத்துத் தெளித்து உரைப்பதில் திருமந்திரம் போல்வதொரு முழுநூலை உலகின்கண் வேறு எந்த மொழியினும் காண்டல் அரிது. முடிவான மந்திரங்களும், அவற்றை உருவேற்றும் முறைகளும், அவற்றை அமைக்கும் சக்கரங்களும், அம் மந்திரங்களுக் குரிய மாபெருந் தெய்வங்களும், அத் தெய்வங்களெல்லாம் முழுதற் கடவுளான சிவபரம் பொருளின் ஆணைவழி நின்று தம்மை வழிபடுவார்க்கு இம்மை மறுமைப் பயன்களை அளிக்கும் வகைகளும், தவ ஒழுக்கத்தின் பாகுபாடுகளும், அவற்றை மேற்கொண்டு ஒழுகுமாறும், அழிவிலாப் பேரின்பப் பேறும் முடிந்த நிலையும் ஆகிய எல்லாம் முற்ற எடுத்து முடியக் கூறும் முழுமுதல் நூல், திருமூலர் திருமந்திரமே யாகும்.

## முடிவுரை

இறையருள் நெறி செல்ல விழைந்து தலைப்படுவோர் எவரும், திருமூலர் திருமந்திர நூலை ஓதிச் சிறப்படையக் கடவர்.

---

† "Poetry is the translation of experience into language" —L. Abercrombie, The Idea of Great Poetry, p. 23

‡ "A man who has something really profound to say will seldom fail to find a way in which to say it... Every spirit builds its own house"
— W. H. Hudson, An Introduction to the [Study of Literature, p. 28

* "The art of the artist is to hide the art, and the business of the critic is to find it again" —W. H. Hudson, p. 62.

---

# ஆணையர் கலந்து கொண்ட நிகழ்ச்சிகள்

| | |
|---|---|
| 29-6-63 | பழனி ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமி கோயிலின் சார்பில் பழனியாண்டவர் கீழ்க்கலைப் பண்பாட்டுக் கல்லூரியின் விடுதிக் கட்டிடத்திறப்பு விழா. |
| ,, | பொறியியலாரின் பண்டங்களின் தொகுப்புக் கிடங்கிற்கு அடிக்கல் நிறுவும் விழா. |
| ,, | தேவார இசைப்பள்ளியின் கட்டிட விரிவுத்திறப்பு விழா. |
| ,, | ஸ்ரீ பெரியாவுடையார் கோயிலில் கலியாண மண்டபக் கால்கோள் விழா. |
| 10-7-63 | பழனி தேவஸ் தானத்தின் சார்பில் எச். டி. டிரான்ஸ்பார்மர் தொடக்க விழா. |
| 14-7-63 | திருவாரூர்த் திருநாவுக்கரசு சுவாமிகள் கோயில் ஸ்ரீ பசுபதீஸ்வரர் கோயில் கும்பாபிஷேக விழா. |

மதுரை மீனுட்சி கோயிற் கும்பாபிஷேக விழாவில், தமிழ்நாட்டுக் கவர்னர் திரு. விஷ்ணுராம் மேதி, கேரள நாட்டுக் கவர்னர் திரு. வி. வி. கிரி, நமது அறநிலைய அமைச்சர் திரு. எம். பக்தவத்சலம், நம் அறநிலைய ஆணையர் திரு. மா. சே. சாரங்கபாணி முதலியார் முதலிய பெருமக்கள் பலரும் கலந்து கொண்டு சிறப்பிக்கும் காட்சி

